For private circulation only

Book Post

https://christianhistoricalsociety.in/

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

விலை : ரூ 60

திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும்

ஜூன் 2022

இதழ் 25

## அகக் கண்களுக்கு ஒளியூட்ட

எபே 1:19






# ஆசிரியர் சுவடு

**கிறிஸ்துவுக்குள் பிரியமான கிறிஸ்தவ வரலாற்று பிரியர்களே,**

உலக வரலாற்றை இரண்டாக பிரித்த கர்த்தரும் மீட்பருமாகிய இயேசு கிறிஸ்துவின் இனிதான நாமத்தினாலே வாழ்த்துக்களையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

கர்த்தருடைய பெரிதான கிருபையினாலே திருநெல்வேலி வரலாற்றுச் சங்கம் மூன்று ஆண்டுகளை நிறைவு செய்திருக்கின்றது. 'அற்பமான ஆரம்பத்தின் நாளை யார் அசட்டைபண்ணலாம்?' என்ற சகரியா தீர்க்கனின் வார்தையின்படி எளிதான ஆரம்பம்தான் எனினும் கர்த்தருடைய கிருபையினாலே மூன்று ஆண்டுகள் நிறைவுறக் கர்த்தர் கிருபை செய்தார். நம் வரலாற்றுச் சங்கத்தின் மாத இதழ் இரண்டு ஆண்டுகள் கடந்து வெளிவந்து கொண்டிருக்கின்றது. நம் சங்கத்தின் மூலமாக இதுவரை ஐந்து புத்தகங்களை மறுபதிப்பு செய்துள்ளோம். வருங்காலங்களில் அநேக புத்தகங்களை மறுபதிப்பு செய்யவும், புதிய எழுத்தாளர்களை உருவாக்கும் பயிற்சி பட்டறை நடத்தவும், கிறிஸ்தவ எழுத்தாளர்களை ஊக்குவிக்கும் வண்ணம் அவர்களுக்கு விருதுகள் வழங்கவும் திட்டங்கள் உள்ளன.

நம்முடைய சங்கத்தின் மூலமாக ஆங்காங்கே அமைந்திருக்கும் வரலாற்றுச் சின்னங்கள் மற்றும் வரலாற்று சுவடுகள் அழிந்துவிடாதபடி முடிந்த அளவிற்கு பாதுகாத்து வருகின்றோம். மேலும் அறியப்படாத பல அரிய வரலாற்று செய்திகளையும், இடங்களையும் கண்டறிந்து மக்களுக்கு தெரியப்படுத்தி வருகின்றோம்.

ஜீலை மாதத்தின் தலைப்பாக **"திருச்சபை மக்களின் வாழ்வியல் நடைமுறைகளில் மிஷனெரிகளின் தாக்கமும் பங்களிப்பும்"** என்ற தலைப்பு தேர்வு செய்யப்பட்டிருக்கின்றது. எழுத்தாளர்கள் எதிர்கால சந்ததிகளும் வரலாற்றை அறிந்துக் கொள்ளும் வகையிலே தங்கள் எழுத்தினை அனுப்ப அன்போடு கூட கேட்டுக் கொள்ளுகின்றேன்.

திருநெல்வேலி வரலாற்றுச் சங்கத்திற்கு தாங்கள் அளித்துவரும் ஆதரவையும், உதவியினையும் தொடர்ந்து கொடுக்க அன்புடன் கேட்டுக்கொள்ளுகின்றோம். ஒவ்வொரு மாதமும் மாத இதழினை அச்சிடுவதற்கு பெரும் பொருட்செலவீனங்கள் உண்டு. விளம்பரங்கள் மூலமாகவும், காணிக்கைகளின் மூலமாகவும் ஆதரவு கொடுக்க அன்புடன் கேட்டுக் கொள்ளுகின்றேன். தங்களுக்கு தெரிந்த நண்பர்களுக்கு மாத இதழினை அறிமுகம் செய்து அவர்களை சந்தாதாரர்கள் ஆக்குவதின் மூலம் இன்னும் பலருக்கு திருச்சபை வரலாற்று செய்தி சென்றடையும். இச்சங்கத்தின் ஊழியத்திற்காக தொடர்ந்து ஜெபிக்க உங்களை அன்போடு கூட கேட்டுக் கொள்ளுகின்றேன்.

கிறிஸ்துவின் பணியில்

மன்னா செல்வகுமார்
ஆசிரியர்

**சுஜித் ரெக்ஸ்**
வடிவமைப்பு
75388 12218

**மன்னா செல்வகுமார்**
ஆசிரியர்
91767 80001

christianhistorical@gmail.com

**திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்**

வெளியீடு








தமிழகத்தில் இன்றுவரை நடைமுறையிலுள்ள தொடக்ககால

# மிஷனெரிகள் அறிமுகப்படுத்திய சபை ஒழுங்கு முறைகள்



J.ஜான் ஞானராஜ்
கல்லிடைக்குறிச்சி

## 1.கத்தோலிக்க கிறிஸ்தவ சபை

### தூய. சவேரியார் (1506-1552)

தமிழகத்தில் கத்தோலிக்க கிறிஸ்தவம் இன்றளவும் சிறப்புடன் வேரூன்றி நிற்க அடிப்படையாக அமைந்தது தூய. சவேரியாரின் தொடர் நற்செய்திப் பணியாகும். நற்செய்திப் பணியுடன் அநேக சபை ஒழுங்கு முறைகளை தம்மால் உருவாக்கப்பட்ட சபைகளில் அவர் நடைமுறைப்படுத்தினார். அவை இன்று வரை நடைமுறையில் உள்ளது. அவற்றைக் காண்போம்.

**1. குருசடி வழிபாடு**

தூய சவேரியார் நற்செய்திப் பணி செய்த 16 ஆம் நூற்றாண்டு காலத்தில் கிறிஸ்தவர்கள் வறுமை நிலையில் வாழ்ந்து வந்தனர். அவர்களால் தேவாலயம் கட்டி ஆராதனை நடத்துகிற அளவு பண வசதி இல்லை. இதைக்கண்ட சவேரியார் கிறிஸ்தவர்கள் வாழ்ந்த கிராமங்களில் தெருக்கள்தோறும் சிலுவையின் (குருசு) மேன்மையை வெளிப்படுத்தும் வண்ணம் சிலுவையை நட்டு அந்த இடத்தில் காலையிலும், மாலையிலும் வழிபாடு நடத்தினார்.

சிலுவை நடப்பட்ட இடம் குருசடி என்றும், அந்த வழிபாடு குருசடி வழிபாடு என்றும் அழைக்கப்பட்டது. இந்த வழிபாட்டு முறை இன்றளவும் தென் தமிழகத்தில் இருப்பதை காணமுடியும்.

**2. அனுதினமும் காலை மாலை ஆராதனை**

தென்தமிழகத்தில் கிழக்கு கடற்கரையோரக் கிராமங்களிலும் மேற்குக் கடற்கரையோர கிராமங்களிலும் கால்நடையாகவும் படகு மூலமாகவும் சென்று நற்செய்திப் பணி செய்த தூய சவேரியார் அந்த கிராமங்களில் காலையிலும், மாலையிலும் ஜெப ஆராதனையைத் தொடங்கி அவற்றை அனுதினமும் காலையிலும் மாலையிலும் நடத்தச் செய்தார்.



அதிகாலை ஆராதனை 4.30 மணி அளவில் நடைபெற்றது. சவேரியார் காலத்தில் தென்தமிழக கிறிஸ்தவர்களில் பெரும்பான்மையோர் மீனவர்கள். அதிகாலையில் மீன்பிடிக்கச் செல்லும் முன்பாக 4.30 மணிக்கு அனைவரும் வரவேண்டும். ஆராதனை முடிந்த பின் மீன்பிடிக்கச் செல்ல வேண்டும். இரவில் மீன்பிடித்து வந்தஉடன், இரவு ஆராதனையில் அனைவரும் கலந்து கொள்ள வேண்டும். அதன்பின்பு உணவு சாப்பிடச் செல்ல வேண்டும். இப்படி ஒரு சிறப்பான காலை, மாலை ஆராதனை எனும் ஒழுங்குமுறை மீனவ கிராமங்களில் தூய சவேரியாரால் நடைமுறைப்படுத்தப்பட்டது. பின்னர் உள் கிராமங்களிலும் நடைமுறைப்படுத்தப்பட்டது. அது இன்றளவும் நடைபெறுகிறது.

**3. நேர்ச்சை பொருள் படைத்தல்**

தென்தமிழகத்தில் தூய.சவேரியார் கிராமங்களில் நற்செய்திப் பணி செய்தபொழுது ஏழை கிறிஸ்தவர்கள் அவருக்கு உணவாக கருப்பட்டியும், தவிடும் கலந்த கலவையை கொடுத்தனர். அவற்றை தூய. சவேரியார் அன்போடு ஏற்றுக் கொண்டார். அதை நினைவு கூறும் வண்ணம் தூய சவேரியார் பெயரைக் கொண்ட தென்தமிழக கத்தோலிக்க கிறிஸ்தவ தேவாலயங்களில் கருப்பட்டி தவிடு கலந்த கலவை நேர்ச்சைப்பொருளாக படைக்கப்படுகிறது.

**4.வேதியர் மூலம் மறைக்கல்வி வகுப்புகள்**

தூய சவேரியார் தம்மால் நற்செய்தி அறிவிக்கப்பட்ட கிராமத்தினர் மறைக்கல்வியில் வளர வேண்டும் என்பதற்காக சிறு மணி ஒன்றை கையில் எடுத்துக் கொண்டு மணியை அடித்தவாறு தெருத்தெருவாக சென்று சிறுவர்களையும் பெரியோர்களையும் திருமறை போதனைகளை தரும் மறைக்கல்வி வகுப்புக்கு அழைத்து வந்து மறை கல்வியைக் கற்றுக் கொடுப்பார். தான் கற்றுக் கொடுத்த பாடங்களை தமது தமிழ் மொழிபெயர்ப்பாளர் உதவியுடன் தாளில் எழுதி வைத்திருப்பார். அவற்றை கிராம தலைவர்களிடம் கொடுத்து தாம் சென்ற பிறகு அவற்றை கிராம மக்களுக்கு கற்றுக் கொடுக்கும்படி ஏற்பாடு செய்தார். ஆனால் இத்தகைய முறை அவருக்கு மனநிறைவை தராததால் வேதாகம கல்வியை நன்கு கற்றிருந்த கிறிஸ்தவர்களை வேதியர் (வேதம் போதிப்பவர்) என்ற பெயரில் மறைக்கல்வி வகுப்பு நடத்த நியமித்தார். தேவாலயங்களில் நடத்தப்பட்ட இந்த வகுப்புகள் படிப்படியாக தொடக்கப்பள்ளிக் கூடங்களாக மாறி பின்னர் நடுநிலை, உயர்நிலை, மேல்நிலை பள்ளிகளாக, கல்லூரிகளாக இன்று வளர்ச்சி பெற்று சவேரியாரின் பணிக்கு சான்றாக காணப்படுகிறது.

## 2. வீரமாமுனிவர் (1680-1747)

**1. தூய. மரியன்னை பெயரால் தேவாலயங்கள்**

தமிழக மக்கள் பெண் தெய்வ வழிபாட்டில் பெரும் ஈடுபாட்டோடு இருப்பதைக் கண்ட வீரமாமுனிவர் தூய. மரியன்னை பெயரால் தேவாலயங்களை எழுப்பினார்.

தூய.மரியன்னைக்கு அடைக்கல நாயகி-அடைக்கல அன்னை, பெரியநாயகி அம்மை என தமிழ் பெயர்களை சிறப்பு பெயர்களாகக் கொடுத்தார். தூய.மரியன்னை மூலமாக இறைவனிடம் வேண்டுதல் செய்யும் வழிபாட்டு முறையையும் மையப்படுத்தினார். மயிலாப்பூர் ஆயராக இருந்த பிரான்சிஸ் லெய்னஸ் அவர்களிடம் குழந்தை இயேசுவை தாங்கிய மரியன்னையின் உருவத்தை தமிழ் பெண் வடிவில் வரைந்து கொடுத்து மணிலாவில் இருந்து அத்தகைய சுரூபம் தமக்கு வந்துசேர ஏற்பாடு செய்ய கேட்டுக் கொண்டார். அதன்படியே அந்த சுரூபம் வந்ததும், அதை தேவாலயத்தில் திருநிலைப்படுத்தி பெரிய நாயகி அம்மாள் என்ற பெயரில் நவநாள் வழிபாடும் திருவிழாவும் கொண்டாடி சிறப்பித்தார்.

**2. ஆண்டுதோறும் திருவிழாக்கள். அவற்றில் நவநாள் ஜெப வழிபாடு**

தமிழ்நாட்டில் பிற சமயங்களில் ஆண்டு தோறும் திருவிழாக்கள் நடைபெறுவதையும் அவற்றில் மகிழ்ச்சியோடு மக்கள் பங்கேற்பதையும் கண்ட வீரமாமுனிவர் கிறிஸ்தவ சமயத்திலும் தேவாலயத்தில் ஆண்டு திருவிழாக்களை தொடங்கினார். அதில் கொடியேற்றம், நவநாள் ஜெப வழிபாடு என பத்து நாள் விழா சிறப்பாக நடத்தப்பட்டது. நவநாள் வழிபாட்டு பாடல்களைத் தாமே எழுதி, மெட்டு அமைத்து இசையோடு பாடச் செய்தார். நவநாள் வழிபாட்டுக்காக 15 பாடல்கள் அவரால் எழுதப்பட்டது. இன்றளவும் இப்பாடல்கள் பாடப்படுவது குறிப்பிடத்தக்கது. திருவிழாக்கள் நவநாள் வழிபாட்டோடு ஆண்டுதோறும் கொண்டாடப்படுவது தமிழகமெங்கும் கத்தோலிக்க திருச்சபைகளில் இவர் மூலம் பரவியது.

**3. தேவாலய திருவிழாக்களில் தேர்-சப்பர பவனி தொடக்கம்**

கிறிஸ்தவ இறைபக்தி தேவாலய அளவில் நின்றுவிடாமல் தேவாலயத்திற்கு வெளியிலும் வீதிகளிலும் கொண்டு செல்லும் வகையில் தேரில் அடைக்கலமாதா சுரூபத்தை வைத்து பெரிய வீதிகளில் ஊர்வலமாக கொண்டு வரவும் ஊர்வலத்தில் மன்றாட்டு, இறைவேண்டல் செய்தவாறு கிறிஸ்தவப் பக்தி பாடல் பாடிக் கொண்டு இறைமக்கள் வரும்படியான புதிய நடைமுறையை வீரமாமுனிவர் நடைமுறைப்படுத்தினார். சமய வேறுபாடின்றி பொதுமக்கள் அதில் பங்கேற்று அடைக்கல அன்னையின் ஆசி பெற்றனர். இந்த நிகழ்வுக்குப் பின்னர் அந்நிய சமயமாக இருந்த கிறிஸ்தவம் தமிழ் கலாச்சாரம் சார்ந்த சமயமாக மாறி வளர்ச்சியைப் பெற்றது. தமிழகமெங்கும் கத்தோலிக்க சபைகளில் தேர்-சப்பர பவனி வீரமாமுனிவர் காலம் முதல் தொடங்கலாயிற்று.

**4.கிராமங்கள்தோறும் தேவாலயம்**

கிறிஸ்தவர்கள் வசித்த கிராமங்களில் எல்லாம் தேவாலயம் கட்டுவது வீரமாமுனிவரது சிறப்பு பணிகளில் ஒன்றாக இருந்தது. அவர் பணி செய்த இடங்களின் தேவாலயங்கள் இன்றளவும் சான்றாக உள்ளது.

**5.கல்லறை தோட்டங்களை அமைத்தல்**

கிறிஸ்தவர்கள் இறந்த பின் அவர்களை அடக்கம் செய்வதற்கான கல்லறை தோட்டங்களை அமைப்பதிலும் வீரமாமுனிவர் கவனம் செலுத்தினார். காவிரி கரையோர மற்றும் டெல்டா மாவட்டங்களில் அனைத்து கிறிஸ்தவ தேவாலய சபைகளுக்கும் கல்லறைத் தோட்டங்கள் முக்கிய இடங்களில் இன்றளவும் இருப்பது குறிப்பிடத்தக்கது. இதற்கு அடிகோலியவர் வீரமாமுனிவர் ஆவார். அக்கிராமங்களின் செவிவழி பாரம்பரிய செய்திகள் இதை உறுதிப்படுத்துகிறது.

## II. சீர்திருத்தக் கிறிஸ்தவ சபை

**1.பர்த்தலோமேயு சீகன்பால்க் (1683-1719)**

தமிழ்நாட்டிற்கு முதல் சீர்திருத்த கிறிஸ்தவ மிஷனரியாக 1706 இல் அரசவை மிஷனரிகள் என்ற தகுதியுடன் வருகை தந்தவர்கள் சீகன்பால்கும் புளுச்சோவும் ஆவர். டென்மார்க் அரசர் IVம் பிரெடரிக் அவர்களால் இந்தியாவிற்கு இவர்கள் அனுப்பப்பட்டனர். அநேக சபை ஒழுங்கு முறைகள் சீகன்பால்கால் அறிமுகப்படுத்தப்பட்டன.

**I.உண்டு உறைவிட விடுதிப் பள்ளிக்கூடங்கள்**

இந்தியாவிலும் தமிழ்நாட்டிலும் சீர்திருத்தக் கிறிஸ்தவத்தில் முதன்முதலாக சீகன்பால்க்கு அவர்களால் விடுதிப் பள்ளிக்கூடங்கள் தொடங்கப்பட்டன. அதன் பின்பே இந்தியாவெங்கும் சீர்திருத்த கிறிஸ்தவர்களின் கல்விப் பணியில் படிப்படியாக விடுதியுடன் கூடிய பள்ளிக்கூடங்கள் தொடங்கப்பட்டது.

**II.பள்ளிகளில் மதிய உணவு திட்டம்**

தம்மால் தொடங்கப்பட்ட பள்ளிக்கூடங்களில் விடுதியில் தங்கிப் பயிலாத ஏழை எளிய மாணவ மாணவியர்களுக்கு மதிய உணவு வழங்குகிற சிறப்பு திட்டத்தை சீகன்பால்கு நடைமுறைப்படுத்தினார். இங்கு மதியம் மீன் உணவு வழங்கப்பட்ட அரிய தகவலையும் நாம் அறிந்துகொள்கிறோம்.

**III.பெண்களுக்கான பள்ளிக்கூடம்**

பெண்கள் மட்டும் கல்வி பயிலும் அளவில் பள்ளிக்கூடங்கள் சீகன்பால்குவால் தரங்கம்பாடி வட்டாரத்தில் தொடங்கப்பட்டது.

### IV. ஆராதனைகளில் ஞானப்பாட்டு எனும் பாமாலை பாடும் முறை

தேவாலய ஆராதனைகளில் ஞானப்பாட்டு எனப்பட்ட பாமாலை பாடும் வழக்கத்தை தரங்கம்பாடியில் தொடங்கினார். அதற்காக ஜெர்மன் மொழி ஆராதனை பாடல்கள் அவரால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டன.



### 2. Rev. C. T. E. ரேனியஸ் ஐயரவர்கள் (1790-1838)

நெல்லை அப்போஸ்தலர் என புகழ்ந்தழைக்கப்படும் கனம். ரேனியஸ் ஐயரவர்கள் 1817-1820 வரை சென்னையைச் சுற்றியுள்ள வட தமிழகத்திலும், 1820-1838 வரை 18 ஆண்டுகள் பாளையங்கோட்டையைத் தலைமையிடமாகக் கொண்டு தென் தமிழகத்திலும் சிறப்பாக நற்செய்தி பணியாற்றினார்கள். அவர்களால் தொடங்கப்பட்ட அநேக சபை ஒழுங்கு முறைகள் இன்றளவும் சபைகளில் நடைமுறையிலுள்ளது. அவற்றை நாம் காண்போம்.

#### 1. அனுதினமும் காலை, மாலை ஆராதனையும் இறையருட்செய்தியும்

திருநெல்வேலி, தூத்துக்குடி, தென்காசி, விருதுநகர் மாவட்டங்களில் உள்ள சீர்திருத்த கிறிஸ்தவ சபைகளில் பெரும்பாலானவற்றில் அனுதினமும் காலை, மாலை ஆராதனைகள் நடைபெறுகிறது. அவற்றை தொடங்கி வைத்தவர் ரேனியஸ் ஐயரவர்கள் ஆவார். அவரால் சுமார் 25 கிறிஸ்தவ மிஷன் கிராமங்கள் உருவாக்கப்பட்டன. அவற்றில் முதலில் காலை, மாலை ஆராதனை அனுதினமும் தொடங்கப்பட்டது. பின்னர் அவை அனைத்து திருச்சபைகளிலும் நடைமுறைப்படுத்தப்பட்டது. இன்றளவும் காலை மாலை ஆராதனை நடைபெறுகிறது. பெரும்பாலும் இந்த மாவட்டங்களில் மக்கள் பனையேறும் தொழில் செய்பவர்களாக இருந்தார்கள். காலையில் பனையேறி பதநீர் இறக்கச் செல்லும் முன்பாக அதிகாலை 5 மணி அளவில் நடைபெறுகிற தேவாலய ஆராதனைக்கு அனைவரும் வரவேண்டும். மாலையில் மாலை பதநீர் இறக்கும் பணி முடிந்து வீட்டிற்கு வந்தவுடன் சாப்பிடும் முன்பாக மாலை 7 மணி அளவில் தேவாலயத்தில் நடைபெறும் இரவு ஆராதனைக்கு அனைவரும் வரவேண்டும். ஆராதனை முடிந்தபின் வீட்டிற்கு சென்று சாப்பிட வேண்டும். காலை-மாலை ஆராதனைகளில் கட்டாயம் வேதபாடம் வாசிக்கப்பட வேண்டும், வாசிக்கப்பட்ட வேத பாடத்திலிருந்து இறையருட்செய்தி வழங்கப்பட வேண்டும். இதை சபையின் சட்ட திட்டமாக ரேனியஸ் ஐயரவர்கள் நடைமுறைப்படுத்தினார்கள். 200 ஆண்டுகள் கடந்த நிலையில் இன்றும் இந்த முறை பின்பற்றப்படுகிறது.

#### 2. ஓய்வுநாள் அரிசி காணிக்கை சேகரிப்பு திட்டம்

1829 டிசம்பரில் துண்டுபிரசுர சங்க செலவுக்காக காணிக்கை சேகரிக்கும் பண்டிகை நடைபெற்றபோது ரேனியஸ் அவர்களால் உருவாக்கப்பட்ட முதல் கிறிஸ்தவ மிஷன் கிராமமான அருளூரின் சபை ஊழியரான முத்தையன் உபதேசியாரின் மனைவி தாயாரருளாயி அம்மாள் தாம் உணவு சமைக்கும் போது தினந்தோறும் எடுத்துவைத்த பிடி அரிசியை சேர்த்து வைத்து மூட்டையில் கட்டி அதை வண்டியில் ஏற்றி வந்து பண்டிகையின்போது படைத்தார்கள். அதுகுறித்து ரேனியஸ் விபரம் கேட்டபோது தாயாரருளாயி அம்மாள் தாம் ஒவ்வொரு நாளும் உணவு சமைக்கும் முன்னர் எடுத்து வைத்த பிடி அரிசி அது என்பதை எடுத்துக் கூறினார்கள். அதை நன்கு கேட்ட ரேனியஸ் மாதாந்திர உபதேசியார் கூட்டத்தில் பிடி அரிசி காணிக்கை விபரத்தை அனைத்து உபதேசியார்களுக்கும் விபரமாக எடுத்துக் கூறி அனைத்து சபைகளிலும் அதை அறிவிக்கச் சொல்லி அனுதினமும் எடுத்து வைக்கும் பிடி அரிசி காணிக்கையை வாரந்தோறும் ஞாயிறு அன்று தேவாலயத்தில் படைக்கும்படியாக சிறப்பு திட்டத்தை அறிமுகப்படுத்தினார்கள். இன்றளவும் தென்தமிழகத்தில் கிராம சபைகளில் இத்திட்டம் நடைமுறையில் உள்ளது. கல்லிடைக்குறிச்சி சபை வரலாறு குறித்து விசாரிக்கையில் கல்லிடைக்குறிச்சியில் சபை ஊழியராக 10 ஆண்டுகள் இருந்த திரு விக்டர் சதானந்தர் அவர்கள் தாம் சிறுபிள்ளையாக இருந்த காலத்தில் தமது தகப்பனார் D.S.பொன்னையா கல்லிடைக்குறிச்சியில் மூன்று முறை சபை ஊழியராக இருந்ததால் தந்தை மூலம் அறிந்து கொண்ட ஒரு காரியத்தை பகிர்ந்துகொண்டார்கள். '1906-1910 வரை நடைபெற்ற கல்லிடைக்குறிச்சி தேவாலயக் கட்டுமான பணியின்போது சபை மக்கள் கொடுத்த அரிசி காணிக்கை அப்பணிக்கு பேருதவியாக இருந்தது'

#### 3. ஒருநாள் வருமானக் கவர் காணிக்கை (லக்கோடா) படைத்தல்

சபைகள் தங்களது வளர்ச்சிக்கு அயல் நாடுகளை சார்ந்து இருக்கக்கூடாது சொந்தக்காலில் நிற்க வேண்டும் என்பதை நோக்கமாகக் கொண்டு ஒரு நாள் வருமான கவர் காணிக்கை படைக்கும் திட்டத்தை சபைகளில் ரேனியஸ் ஐயரவர்கள் அறிமுகப்படுத்தினார்கள். இன்றளவும் இந்த கவர் காணிக்கை படைக்கும் வழக்கம் தென்தமிழக சபைகளில் நடைமுறையில் உள்ளது.

#### 4. ஆசிரியர் பணியுடன் கூடிய சபை ஊழியர்-Teacher Cum Catechist

தென்தமிழக சபைகளின் வளர்ச்சிக்கு பேருதவியாக இருந்த முறை ஆசிரியர் பணியுடன் கூடிய சபை ஊழியர் முறையாகும். இந்துக்களும் கிறிஸ்தவர்களும் கலந்து வாழ்ந்த கிராமங்களில் இம்முறை பெரிய வெற்றியை தந்தது. தங்களது பிள்ளைகளை கல்வி கற்பதற்காக பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பிய இந்து பெற்றோர்களுக்கு சபை ஊழியராக பணி செய்யும் பள்ளி ஆசிரியருடன் நல்ல தொடர்பு ஏற்பட்டது. அவர்கள் அவரிடம் ஆலோசனை கேட்பது, சபை ஊழியரும் இந்து மாணவ மாணவியரின் குடும்பங்களின் சுக துக்கங்களில் பங்கெடுப்பது, இந்து மாணவ மாணவியரை உயர்கல்விக்கு அனுப்புவதில் வழிகாட்டுவது என இந்து பெற்றோர்களோடு சபை ஊழியராக இருக்கும் ஆசிரியருக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. இது பிற்காலத்தில் அவர்கள் கிறிஸ்தவத்தை

ஏற்றுக்கொள்வதற்கு நல்லதொரு வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தது.

**5.சபை ஊழியர்களுக்கு மாதாந்திரக் கூட்டம்**

1828 முதல் சபை ஊழியர்களுக்கான மாதாந்திர கூட்டங்களை தலைமையிடமான பாளையங்கோட்டையில் ரேனியஸ் ஐயரவர்கள் நடத்தினார்கள். அதில் சபை ஊழியர்களுக்கு வேத அறிவு வளர வேத பாடம் கற்றுக் கொடுக்கப்பட்டது. சபை நிலவரம், சபை வளர்ச்சி கேட்டு அறியப்பட்டது. பிரச்சினைகளில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்ற ஆலோசனை கூறப்பட்டது, காலரா விஷக்காய்ச்சல் ஏற்படும் காலகட்டத்தில் சபை மக்களுக்கு எவ்வாறு உதவி செய்ய வேண்டும் என்ற போதனை வழங்கப்பட்டது.

**6.சங்க காணிக்கை முறை தொடக்கம்**

சபை உறுப்பினர்கள் அதற்கான சந்தா செலுத்தும் முறை தென் தமிழகத்தில் சங்க காணிக்கை முறை என்று அழைக்கப்படுகிறது. தற்போதைய சங்க காணிக்கை முறைக்கு அது முன்னோடியாக அமைந்தது ரேனியஸ் ஐயரவர்களால் தொடங்கப்பட்ட சங்க காணிக்கை திட்டம். நமக்கு மிஷனரிகளை அனுப்பி அவர்களை பண உதவியால் தாங்கும் C.M.S மிஷன் சங்கத்துக்கு உதவி செய்திட ஒவ்வொரு குடும்பத் தலைவரும் ஒரு தொகையை (கால் பணம் - 23 காசு) காணிக்கையாகக் கொடுப்பதே இந்த முறை.

**7.கிறிஸ்தவ மிஷன் கிராமங்கள் அமைத்தல்**

புதிதாக கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டவர்களை ஊர் விலக்கம் செய்வது, கிராமத்தை விட்டு புறக்கணிப்பது அவர்களது வீடு மற்றும் உடமைகளுக்கு சேதம் விளைவிப்பது போன்ற பல துன்பங்களை பிற மதத்தினர் செய்ததால் கிராமங்களில் சிறுபான்மையாக இருந்த கிறிஸ்தவர்களுக்காக அந்த வட்டாரத்திலேயே தர்ம சகாய சங்கம் - நன்கொடையாளர் மூலம் பெரிதானதோர் நிலம் வாங்கி அதில் தேவாலயம், பள்ளிக்கூடம், குடிநீர் கிணறு அமைத்து அந்த இடத்தில் துன்ப்படுத்தப்பட்ட கிறிஸ்தவ குடும்பங்களை குடியேற்றம் செய்தல் என்ற திட்டமே கிறிஸ்தவ மிஷன் கிராம அமைப்புத் திட்டம்.

1823 இல் முதல் கிறிஸ்தவ கிராமமாக பேய்குளம் வட்டாரத்தில் அருளூர் உருவாக்கப்பட்டது.

1837 இல் கடைசி கிறிஸ்தவ கிராமமாக சாத்தான்குளம் வட்டாரத்தில் சத்தியநகரம் உருவாக்கப்பட்டது. தென் தமிழகத்தில் ரேனியஸ் ஐயரவர்களால் 25 கிறிஸ்தவ மிஷன் கிராமங்கள் உருவாக்கப்பட்டுள்ளது.

**8.ஆலய பரிபாலன நிதி-LCF**

சபைகளின் தேவாலய செலவினங்களை சபை மக்களே பொறுப்பேற்க வேண்டும் என்ற அடிப்படையில் 1823 இல் ஆலய பரிபாலன நிதி-LCF ரேனியஸ் ஐயரவர்களால் தென்தமிழகத்தின் C.M.S சபைகளில் நடைமுறைப்படுத்தப்பட்டது. தேவாலய விளக்கு தீபத்திற்கான எண்ணெய் செலவினங்கள், தேவாலய பராமரிப்பு பணிகள் ஆகியவற்றுக்கு என உழைத்து ஊதியம் பெறும் ஒவ்வொரு குடும்பத் தலைவரும் ஒரு தொகையைக் கொடுப்பது அந்தத் தொகையை ஆலய பரிபாலன நிதி கணக்கில் வரவு வைப்பது அதில் இருந்து தேவாலய செலவினங்கள் செய்யப்பட்டது. இம்முறை இன்றளவும் நடைமுறையில் உள்ளது.

**9.சபை ஒழுங்கு கட்டுப்பாடு கடைபிடித்தல்**

சபை ஒழுங்குக்கு புறம்பாக திருமணம் செய்தோர் மனைவி உயிருடன் இருக்கும் போதே இரண்டாம் திருமணம் செய்தோர் ஆகியோர் சபை நீக்கம் செய்யப்பட்டனர். சபை ஒழுங்கு சரியாக கடைபிடிக்கபட்டது.

**10.திருமண்டல அளவில் ஆண்டுதோறும் மாம்பழச் சங்க பண்டிகை**

திருமண்டல அளவில் சபை மக்கள் அனைவரையும் ஒருங்கிணைக்கும் பண்டிகையாக 09.07.1834 இல் மாம்பழச் சங்க பண்டிகை தொடங்கப்பட்டது. கைம்பெண் நல்வாழ்வு நிதிக்காக இப்பண்டிகை தொடங்கப்பட்ட போதும் அக்காலம் மாம்பழ சீசன் என்பதால் மாம்பழச் சங்க பண்டிகை என சபை மக்களால் அது அழைக்கப்பட்டது. ஆண்டுதோறும் ஜூலை 9 ஆம் நாளை ஒட்டி குரங்கணி முத்துமாலை அம்மன் கோவில் திருவிழா நடைபெற்று வந்தது. கிறிஸ்தவர்கள் ஆவதற்கு முன்பு தாங்கள் சென்று வந்தது போல கிறிஸ்தவர்களான பின்பும் இந்த திருவிழாவிற்கு மாட்டுவண்டி மூலம் சென்று வந்தனர். இதை பாளையங்கோட்டையில் நேரில் கண்ட ரேனியஸ் அதே நாளில் இந்த பண்டிகையை கொண்டாட செய்தார். கிறிஸ்தவர்கள் அனைவரும் பாளையங்கோட்டையில் அமைக்கப்பட்டிருந்த அலங்கார பந்தலில் இந்த பண்டிகையை கொண்டாடினர். அதுமுதல் கிறிஸ்தவர்கள் திரள் கூட்டமாக மாட்டு வண்டிகளில் ஆண்டு தோறும் இப்பண்டிகைக்கு வந்து பாளையங்கோட்டையில் தங்கி ஆண்டவரை வழிபட்டு சென்றனர். இப்பண்டிகையே பிற்காலங்களில் வட்டாரத் தலைமை இடங்களில் தவச உற்சவம் எனும் ஸ்தோத்திரப் பண்டிகை தொடங்குவதற்கு மூல காரணமாக அமைந்தது.



**அருள்திரு Dr. J N . மனோகரன்**

REGIONEAL DIRECTOR-SOUTH ASIA
COMMUNITY BIBLE STUDY INTERNATIONAL

'கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்' என்ற இந்த அற்புதமான சஞ்சிகை மூலமாக ஒரு புதிய கண்ணோட்டத்தை சபை சரித்திரத்திற்க்குக் கொடுக்கும் முயற்சிக்கு வாழ்த்துகள். முன்னோடிகளாகவும், பாதை காட்டிகளாகவும் (Trend setters), சிறந்த முன்மாதிரிகளாகவும் விளங்கிய மிஷனரிகளின் உதாரணங்களைப் பின்பற்றுமாறு வாசகர்களுக்குத் தெரிவிக்கவும், அறிவுறுத்தவும், அழைக்கவும் மன்னா செல்வகுமார் இதனைத் தொடங்கியுள்ளார். கோயிற்பிள்ளைகளாக, மிஷன் ஆசிரியர்களாக, மருத்துவமனைகளில் மருத்துவர்களாக, செவிலியர்களாக, மகப்பேற்றுத் தாதிமார்களாக, பராமரிப்பாளர்களாக பணியாற்றிய இந்திய மிஷனரிகளின் பங்களிப்பு கவனம் செலுத்தப்படுகிறது. மிஷனரிகள் வாழ்ந்த காலத்தில் இருந்த சமூக சூழ்நிலைகளையும் நினைவூட்டுகிறார்.
இதை திருச்சபை முழுமைக்கும் கற்பிக்கவும், ஆவணப்படுத்தவும் அறிவுறுத்தவும் இப்பணி தொடர வேண்டும் என்று நான் விரும்புகிறேன், ஜெபிக்கிறேன், வாழ்த்துகிறேன்.



கிறிஸ்தவ
# வரலாற்றுச் சுவடுகள்

மாத ஆய்விதழ் சந்தா விபரம்

| சந்தா விபரம் | உள்நாடு |
|---|---|
| தனிப்பிரதி | ₹ 60 + நன்கொடை |
| ஆண்டு சந்தா | ₹ 600 + நன்கொடை |
| ஐந்து ஆண்டு சந்தா | ₹ 3000 + நன்கொடை |

"கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்" மாத ஆய்விதழை நீங்கள் தொடர்ந்து பெற்றுக் கொள்ள G-Pay மூலம் நன்கொடை செலுத்த 91767 80001 என்ற எண்ணுக்கு செலுத்தவும் காசோலை மற்றும் வரைவோலை செலுத்த 'திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்' ( Tinnevelly Christian Historical Society ) என்ற பெயரில் எடுக்கவும்

**சந்தாவை வங்கி கணக்கில் செலுத்த**

Bank :- Federal Bank
Name :- Tinnevelly Christian Historical Society
Account number :- 1748 020000 3684
IFSC Code :- FDRL0001748



**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,**
கதவு எண் 2-2-3(4), வடக்குத்தெரு,
பங்களாச் சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)
04633 290401



# திருவள்ளூரில் கௌடி சந்தித்த பிரச்சனைகளும், எதிர்கொண்ட சவால்களும்




வெ. தானியேல் மோகன்ராஜ்
திருவள்ளூர்


**ஆண்டவரும் இரட்சகருமான கிறிஸ்தேசுவின் நாமத்தில் வாழ்த்துக்கள்,**

மூன்றாம் ஆண்டில் அடியெடுத்து வைக்கும் நமது **கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்** இதழிற்கு அன்பின் வாழ்த்துக்கள், இதை அதிக சிரத்துடன் முன்னின்று நடத்திவரும் சகோ. மன்னா செல்வகுமார் மற்றும் சகோ. சுஜித் ரெக்ஸ் மற்றும் இம்மாபெரும் பணியில் உறுதுணையாக இணைத்திருக்கும் அனைத்து சகோதர சகோதரிகளுக்கு வணக்கங்கள்.

இவ்விதழில் மிஷனரிகள் சந்தித்த பிரச்சனைகளும், எதிர்கொண்ட சவால்களும் என்ற தலைப்பின் அடிப்படையில் உங்கள் மத்தியில் திருவள்ளூர் பகுதியில் கிறிஸ்தவம் பரவியபோது மிஷனரிகள் சந்தித்த பிரச்சனைகள் மற்றும் சவால்களை உங்களுடன் பகிர்ந்துகொள்ள விரும்புகிறேன்.

1848 இல் ஒரு வெஸ்லியன் மெத்தடிஸ்ட் மிஷனரி திருவள்ளூருக்கு பயணம் மேற்கொண்டு அவ்வூர்மக்களையும் அவர்களின் சூழ்நிலைகளை அறிய முற்பட்டார். அவர்களோ விக்கிரக வழிப்பாட்டில் திளைத்திருப்பத்தைக் கண்டு துயருற்று கடவுளிடம் அவர்களுக்காக விண்ணப்பம் செய்தார். அதுமட்டுமின்றி அந்நாட்களில் வெளிவந்த வெஸ்லியன் மாத பத்திரிகையில் **‘தென்னிந்தியாவிலுள்ள திருவள்ளூரில் உள்ள குளம்’** என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதி அந்த கட்டுரை படிக்கும் வாசகர்களை அந்த ஊர்மக்களின் இரட்சிப்புக்காக பிரார்த்தனை ஏறெடுக்க கேட்டுக்கொண்டார்.



அப்பகுதியில் வைணவ கோயில் பூசாரிகள் பிராமணர்களாக இருந்தனர். அவர்கள் அதிகார கர்வமுள்ளவர்களாக இருந்து திருவள்ளூர் பகுதிக்கு மிஷனரி பணிசெய்ய வருபவர்களின் வருகையை கடுமையாக எதிர்த்து வந்தனர். அவர்களது மூதாதையர்கள் பல நூற்றாண்டுகளாக ஆதிக்கம் செலுத்திவந்த துரதிஷ்டமான (தலித்) மக்களுக்கு சுதந்திரம் பெற்றுத்தர முயற்சிசெய்ய நினைக்கும் மிஷனரிகளை கடும் குரோதத்ததுடன் எதிர்த்து வந்தனர்.

மிஷனரிகள் மீது கற்களை வீசி, கட்டைகளால் அடித்து துன்புறுத்தி அவர்களை மிஷனரி பணிகளை மேற்கொள்ளவிடாமல் தடுத்தனர், அருட்பணி ஜேம்ஸ் ஹொப்டே என்ற மிஷனரியின் காதை மனசாட்சியில்லாமல் அறுத்துவிட்டனர். ஆகவே 1880 வரை இந்துக்கள் மத்தியில் மிஷனரி பணிகள் மேற்கொள்வது கடினமாக இருந்தது. ஆனால் கடவுளுடைய தீர்மானம் அன்றொரு நாள் வெஸ்லியன் மிஷனரி திருவள்ளூர் நகரத்திற்காக ஜெபித்த ஜெபம் 1883 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் திருவள்ளூர் தமிழ் மிஷன்

பணித்தளத்திற்கு **வில்லியம் கௌடி** நியமிக்கப்பட்டார்.

சுமார் 25 ஆண்டுகள் இந்தியாவில் அவரின் மிஷனரி பணிகள் மாபெரும் மாற்றத்தை மக்கள் மத்தியில் கொண்டு வந்தது. இந்த ஆண்டு அவருடைய **நூற்றாண்டு நினைவை** கொண்டாடிக்கொண்டு இருக்கின்றோம்.(1922-2022)

இவரின் ஊழியப்பாதையில் அவர் சந்தித்த பிரச்சனைகள், சவால்களை காணலாம்,

அவர் முதன்முதலில் திருவள்ளூருக்கு வந்தபோது அவ்வூர் மக்களுக்கு சுவிசேஷம் அறிவிக்க பல்வேறு தடைகளும், பிரச்சனைகளும் ஏற்பட்டது, சுவிசேஷம் அறிவிக்கக்கூடாது என்று இந்து சமூகத்தின் மூலமாக அவருக்கு எச்சரிக்கை விடப்பட்டது. இருப்பினும் இளம் வயதான கௌடி துணித்து இந்துக்கள் அதிகம் கூடும் சமயங்களிலும், தெருமுனைகளிலும் நின்று சுவிசேஷம் அறிவித்தார், அச்சமயங்களில் எதிர்பாராத திசைகளில் இருந்து கற்களும் எறிந்தும், மாட்டுச்சாண, கழிவு நீர்களையும் அவர்மீது ஊற்றி அவரை அப்பணிகளை செய்யசெய்யவிடாமல் தடுத்தனர், இருப்பினும் சுவிசேஷ பணிகளை மகிழ்ச்சியாக தொடர்ந்து செய்துவந்தார்.

உயர்குல மக்கள் மற்றும் ஜமீன்கள் இவரின் வருகையை பெரிதும் எதிர்த்தனர், தலித் மக்களுக்காக அவர் அரும்பாடுபட்டு கட்டிய விடுதிகள், பள்ளிகள், மருத்துவமனைகள், தொழிற்சாலை ஆகிவற்றின் மூலம் தலித் மக்களின் வாழ்வாதாரம் உயர்த்துவதை உயர்குல மக்கள் விரும்பவில்லை. ஆகவே அவரை கொலை செய்ய பலமுறை அவர்செல்லும் வழிகளில் ரவுடிகளை ஏவி அவரை கொல்ல நினைத்தனர். ஆனால் கடவுள் அதை முன்கூட்டியே அறிய அவருக்கு உதவிசெய்தார்.

> ““
> **என் மீது கற்களை எறிந்த உங்களுக்கு கடவுள் அரிசி மழையை பொழிவார் என்று ஆசீர்வதித்தார்**
> ““

அவர் மிஷனரி பணிநிமித்தமாக செல்லும் வழியில் கற்களை எறிந்து அவரின் இரத்தம் சொட்ட சொட்ட வடியும் நிலையிலும் **‘என் மீது கற்களை எறிந்த உங்களுக்கு கடவுள் அரிசி மழையை பொழிவார் என்று ஆசீர்வதித்தார்’** மற்றொருமுறை அவர்மீது எறிந்த கற்களை கொண்டு இக்கற்களை கொண்டு கடவுளுக்கென நான் கட்டும் தேவாலயத்திற்கு அடித்தள கல்லாக இதை மாற்றுவேன் என்றார்.

குதிரையில் பயணிக்கும் பொது சாலையின் இருபுறமும் இரும்பு கம்பியைக்கொண்டு கட்டி அதிலிருந்து விழுந்து அவர் சாகவேண்டும் என்று நினைத்த அவர்களின் திட்டமும் தோல்வியுற்றது. சரியாக அந்த பகுதிக்கு வந்ததும் தனது குதிரை பயணிக்காமல் படுத்துக்கொண்டது கடவுளின் செயலே.

இரவு நேரங்களின் அவரின் பங்களாவின் மீது பெரியபெரிய கற்களை வீசி, அவர் வீட்டின் லாந்தர் விளக்குகளை உடைத்து அவருடன் இருந்த குடும்பத்தாரை பயமுறுத்தினர்.

தினமும் காலை சூரியன் உதிக்கும் முன்னமே தான் பயணிக்கும் இடத்தை அடைய பயணத்தை துவங்குவார், சுமார் 30 மைல் தொலைவை காலாற நடந்தும், குதிரை மற்றும் சைக்கிள் ஆகியவற்றை பயன்படுத்தி பயணம் மேற்கொள்வார். இந்திய வானிலை வெளிநாட்டவராகிய கௌடிக்கு பெரும் சவாலாக இருந்தது, நல்ல வெயில் நேரங்களில் பயணிக்கும்போது அருகில் உள்ள இல்லங்களில் தண்ணீர் வாங்கி தலைமீது ஊற்றி தொடர்ந்து பயணம் மேற்கொள்வார். வெயில், மழை, குளிர், ஆறு, வெள்ளம் ஆகிய பல இடர்பாடுகள் அவருக்கு மிஷனரி பணிகளை மேற்கொள்ள அவருக்கு சவாலாக இருந்தது. திருவள்ளூர் பகுதி பல ஆறுகளால் நிறைந்த பகுதி தன்னுடைய ஊழிய பாதைகளில் கௌடி பலமுறை ஆறுகளை கடக்கும் போது திடீர் வெள்ளப்பெருக்குகள் ஏற்பட்டு உயிருக்கே ஆபத்து விளைவிக்கும் நிலையில் இருந்து கடவுள் காப்பாற்றினார்.

**பஞ்சமி நிலங்களை மீட்டுதல்:**

இப்பேற்பட்ட பெரும்செயல்களை செய்த கௌடி தனது வாழ்நாளின் மாபெரும் பணியான மிஷனரி பணியுடன் சமுதாய முன்னேற்ற பணிகளுக்கு முக்கியத்துவம் கொடுத்தார். அதன்மூலமாக தலித் மக்களின் வாழ்வாதாரத்தை பெருக்க அவர்பெரும் முயற்சியை மேற்கொண்டு அதில் வெற்றியும் கண்டார். ஆம் ஜமீன்கள் மற்றும் உயர்குல மக்கள் தலித் மக்கள்களின் சுமார் 3 லட்ச ஏக்கர் நிலங்களை அபகரித்து அதை தலித் மக்களுக்கு திருப்பி தராமல் அவர்களை வஞ்சித்தனர், அடிமைகளாக தாங்களும் தங்கள் குடும்பமும் அவர்களுக்காக பணிசெய்யவேண்டும் என உயர்குல மக்கள் எண்ணினார்.

ஆனால்கௌடி அப்போதைய பிரிட்டிஷ் அரசாங்கத்திடம் தொடர்ந்து வைத்த கோரிக்கைகளை அரசாங்கம் ஏற்று 1891 ஆம் ஆண்டு சுமார் 3 லட்ச நிலங்களை ‘பஞ்சமி நிலங்களை’ அரசாங்கம் மீட்டுத்தந்தது. அவரின் இம்மாபெரும் செயல்களை அப்போதைய நாளிதழ்களும், பத்திரிகைகளும் பெரிதும் பாராட்டின.

**தொடரும்...**





அருள்திரு ஜான் சாமுவேல்
பண்டார செட்டிவிளை

ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து அருளிய அருட்பெருஞ்சாதனங்களுள் ஒன்று திருவிருந்து ஆகும். திருவிருந்தைக் குறித்து இன்றைய காலக்கட்டத்தில் பல விவாதங்களும் பல சர்ச்சைகளும் எழுவதினால் அதனைக் குறித்து மிக ஆழமாகக் கற்றறிந்து கொள்வது ஒவ்வொரு கிறிஸ்தவர்களின் கடமையாகும். திருவிருந்து பரிமாறப்படும் நோக்கமும், அதன் ஆராதனை முறையில் அடங்கியுள்ள அர்த்தங்களும் அறியாதவர்களாய் அதில் பங்குபெறுவது தவறாகும். வேதாகமத்தின் அடிப்படையிலும், நம் திருச்சபை வரலாற்றிலும் திருவிருந்து ஆராதனை உருபெற்றதை நாம் அறிய வேண்டியது அவசியம்.

மார்ட்டின் லூத்தரின் சீர்த்திருத்தம் திருச்சபைகளில் ஏற்படுவதற்கு முன்பு ரோமன் கத்தோலிக்க திருச்சபைகளில் ஏழு சாக்கிரமந்துக்களான **திருமுழுக்கு, உறுதிபூசுதல், நற்கருணை, ஒப்புரவு, நோயில்பூசுதல், குருத்துவம், திருமணம்** ஆகியவை ஆசரிக்கப்பட்டன. பின்னர் பதினாறாம் நூற்றாண்டுகளில் மார்ட்டின் லூத்தரின் சீர்த்திருத்தத்திற்குப் பிறகு நற்கருணையும், திருமுழுக்கும் மட்டுமே சீர்த்திருத்த திருச்சபையினரால் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

திருவிருந்தைக் குறித்து ஆரம்பக்காலங்களில் திருச்சபைச் சீர்த்திருத்தவாதிகளுக்குள்ளாக பலவித கருத்துகள் தோன்றின. 16 ம் நூற்றாண்டில் வாழ்ந்த மார்ட்டின் லூத்தர், சுவிங்கிலி மற்றும் ஜாண் கால்வின் போன்றோர் வேதத்தின் மூலம் தாங்கள் அறிந்த கருத்துக்களை முன்வைத்தார்கள். மார்ட்டின் லூத்தருக்கும், சுவிங்கிலிக்கும் நற்கருணை பற்றிய விஷயத்தில் கருத்து மோதல் பலமாய் ஏற்படவே, இவ்விருவரையும் சமாதானம் செய்யும்படி 1529 ம் ஆண்டு ஹெசி நாட்டின் அதிபதியானவர் மார்பர்க் பட்டணத்தில் ஒரு சமாதானக் கூட்டத்தை ஏற்படுத்தினார். மார்ட்டின் லூத்தரின் ஆதரவாளராக மிலங்ற்றன், ஜெர்னாஸ், பிரன்ஷியு என்பவர்கள் பேசினார்கள். சுவிங்கிலியின் சார்பாக மார்ட்டின் பூசர், எக்கலாம் பேடியு, காலினு, கர்ல்ஸ்ற்றாட் என்பவர்களும் பேசினார்கள். மார்ட்டின் லூத்தர் தன்னுடைய வாதமாக **'நற்கருணையில் வழங்கப்படும் அப்பம் மற்றும் திராட்சை ரசத்தில் இயேசுகிறிஸ்து பிரசன்னமாய் இருக்கிறார்'** என்பதாக வாதிட்டார். சுவிங்கிலி மற்றும் அவரோடு கூட வாதிட்டவர்கள், **'நற்கருணையில் பரிமாறப்படும் அப்பமும், திராட்சரசமும் இயேசு கிறிஸ்துவின் திருச்சரீரத்துக்கும், இரத்தத்துக்கும் அடையாளங்களாய் மாத்திரம் இருக்கிறது'** என்று வாதிட்டார். இருவரின் வாதத்தில் எந்தவித சமாதானமும் எட்டவில்லை.

மார்ட்டின் லூத்தரின் சீர்த்திருத்த சபைகளில் மார்ட்டின் லூத்தரின் கொள்கையே மேலோங்கி நின்றது. சீர்த்திருத்த சபைகள் அனைத்தும் இக்கோட்பாட்டுடனே நற்கருணையை ஆசரித்துக் கொண்டுவருகிறது. ஆங்கிலிக்கன் திருச்சபைகள் மார்ட்டின் லூத்தரின் கோட்பாடுகளில் இருந்து சற்று

வித்தியாசமாக இருக்கின்றது.

இங்கிலாந்து திருச்சபையிலும் பலமாற்றங்கள் ஏற்படலாயின, கிறிஸ்து மார்க்கம் பல சீர்த்திருத்தங்களை அடையவே ஆராதனைக்கு ஆதாரமாக ஒரு ஜெபப்புத்தகத்தை அச்சிட விரும்பினார்கள். புத்தகம் அச்சிடும் பணி 1549 ம் ஆண்டு முதல் ஆரம்பமானது. எட்வர்ட் இராஜாவின் அரசாட்சியின் இரண்டாம் வருஷத்தில் அது ஆராதனையில் பயன்படுத்த வேண்டிய புத்தகமாக தொகுக்கப்பட்டது. ஐந்தாம் வருஷத்தில் பிழைதிருத்தின சில காரியங்கள் அதிலிருந்து நீக்கப்பட்டன. உதாரணமாக ஸ்திரகரண ஆராதனையில் தைலாபிஷேகம் செய்வதையும், மரித்தவர்களுக்காக பிராத்தனை செய்வதையும், தேவகர உபதேசத்தையும் நீக்கிவிட்டனர். சிறிதுகாலம் பயன்பாட்டில் இருந்த புத்தகம் ராணி மேரியின் அரசாட்சி செய்தபோது பயன்படுத்த அனுமதிக்காமல் தடைசெய்யப்பட்டது. பின்னர் 1558 ம் வருடம் நவம்பர் மாதம் 17 ம் தேதி மகா ராணி மேரி மரித்துப்போகவே அவளது சகோதரி எலிசபெத்து மகாராணியாக பொறுப்பேற்ற பிறகு சில மாற்றங்களை மேற்கொண்டு ஜெப புத்தகத்தை பயன்படுத்த ஆரம்பித்தனர். ஜெபப்புத்தகத்தில் சீர்திருத்தத்துக்கு உபயோகமாக வேதமார்க்க பிரமாணங்களையும் அச்சிட்டனர்.

ஆரம்பத்தில் நாற்பத்திரண்டு பிரமாணங்களை அச்சிட்டனர். பின்னர் முப்பத்தொன்பது பிரமாணங்களாகச் சுருக்கி அச்சிட்டார்கள். நற்கருணையைக் குறித்ததான தெளிவான விளக்கத்தை வேத உபதேசத்தைக்குறித்து உண்டான வெவ்வேறான கொள்ளைகளை நீக்க, இங்கிலாந்து தேசத்திலுள்ள ராணியின் அரசாட்சிக்கு உட்பட்ட ஆதிக்க மாகாணங்கள் இரண்டையும் சேர்ந்த குருமார் யாவரும், அத்தியட்சர் அனைவரும் 1562ம் வருடத்தில் லண்டன் நகரத்தில் சங்கமாக கூடிவந்து வேத சித்தாந்த பிரமாணங்களைத் தொகுத்தார்கள். வேத பிரமாணங்கள் கிரான்மர், ரிட்லி, மார்ட்டின் பூசர், பீற்றர் மார்ட்டர் என்பவர்களின் உதவியினால் எழுதப்பட்டது. அவற்றில் **‘கர்த்தருடைய இராப்போஜனமானது கிறிஸ்தவர்கள் ஒருவரில் ஒருவர் வைக்கவேண்டிய அன்புக்கு அடையாளமாக மாத்திரம் அல்ல, கிறிஸ்துவின் மரணத்தினாலே நமக்கு உண்டான மீட்புக்குரிய சாக்கிரமெந்தாயும் இருக்கிறது, எப்படியெனில், அதை கிரமப்படியும் பாத்திரமாயும் விசுவாசத்தோடு வாங்குகிறவர்களுக்கு நாம் பிட்கிற அப்பம் கிறிஸ்துவின் சரீரத்தை பெற்றுக்கொள்ளுதலாயும், ஆசீர்வாதத்தின் பாத்திரம் கிறிஸ்துவின் இரத்தத்தைப் பெற்றுக்கொள்ளுதலாயும் இருக்கிறது.’** இந்த அடிப்படையிலே இந்நாள் வரையிலும் நாம் நற்கருணை ஆராதனையை ஆசரித்து வருகிறோம்.

நம்முடைய திருச்சபை பாரம்பரியங்கள் ஒன்றும் வீணாய் ஏற்படுத்தப்பட்டது அல்ல. பல வேத பண்டிதர்களின் அரிய முயற்சியினால் உண்டாக்கப்பட்டவைகள் ஆகும். அதிலும் குறிப்பாக தாமஸ் கிரான்மர் என்னும் தேவமனிதனின் பங்களிப்பு மிக உன்னதமானது. இங்கிலாந்து திருச்சபை தனக்கென பக்திவிசுவாசத்தை மட்டுமல்லாது அந்த விசுவாசத்தை வெளிப்படுத்துவதற்காக ஒரு வடிவம் கொடுக்கவேண்டும் என்ற நோக்கிலே ஆராதனை முறைமைகளுக்கு எழுத்துவடிவம் கொடுத்தது. எட்வர்ட் என்ற அரசனின் இரண்டாம் வருடத்தில் அதற்கான ஆரம்ப பணிகள் ஆரம்பமாயின. அதின் விளைவாக முதன்முதலில் 1549 ம் வருடம் ஒரு ஜெபப்புத்தகத்தை வெளியிட்டது. பின்னர் ஒரு சில மாற்றங்களுடன் வெளியிடப்பட்ட ஜெப புத்தகமானது திருத்தி அமைக்கப்பட்டு 1552 ம் வருடம் வெளியிடப்பட்டது.

நாம் பயன்படுத்தும் ஆங்கிலேய திருவிருந்து முறையை ஏற்படுத்தியவர் கிரான்மர் அத்தியட்சர் அவர்களே. அவர்களுடைய கரங்களில் இந்த பொறுப்பு கொடுக்கப்பட்ட போது அந்தப் பணியை மிகவும் திறம்பட நிறைவேற்றி முடித்தார். 1548 ம் வருடம் இந்த ஜெப புத்தகத்திற்கான ஆயத்தப்பணிகள் செப்டம்பர் மாதம் ஆரம்பிக்கப்பட்டது. வின்செர் அரண்மனையிலும். அபே அப் செர்ட்ஸியிலும் நடைபெற்ற கூட்டங்களில் பெரிதும் விவாதிக்கப்பட்டு தொகுக்கப்பட்டது. இங்கு கூடிய கூட்டத்தினைத் தொடர்ந்து இங்கிலாந்து பிரபுக்களின் அரண்மனையிலும் அதே வருடம் டிசம்பர் மாதம் 14 முதல் 19 ம் தேதி வரை விவாதிக்கப்பட்டு திருவிருந்து ஆராதனையுடன் சேர்த்து ஜெப புத்தகமாக தொகுக்கப்பட்டது. இவ்வாறாக தொகுக்கப்பட்ட ஜெபப்புத்தகம் டிசம்பர் மாதம் கிறிஸ்மஸ் பண்டிகைக்கு பின்னர் நடைமுறைக்கு வந்தது. வெளியிடப்பட்ட புதிய ஜெப புத்தகம் 1549 ம் வருடம் ஜீன் மாதம் 9ம் தேதிக்கு பின்னர் கட்டாயமாக்கப்படது. கிரேன்மர் பல பாரம்பரியங்களின் உதவியோடு கூட, அவர்களின் ஆராதனை முறைகளை அடிப்படையாக வைத்து இங்கிலாந்து ஆங்கிலிக்கன் திருச்சபைக்கென்று ஒரு ஆராதனையை ஏற்படுத்தினார். கிரான்மரோடு கூட பல மக்கள் சேர்ந்து உழைத்தனர், எனினும் கிரான்மரின் பெயரே இப்புத்தகத்தின் தொகுப்பாளராக அறியப்பட்டது.

திருவிருந்து ஆராதனையானது லத்தீன் மொழியின் “Lex orandi, lex credendi” என்ற கோட்பாட்டின்படி எழுதப்பட்டுள்ளது. ‘நாம் எதை விசுவாசிக்கிறோமோ அல்லது நம்புகிறோமோ, அதைத்தான் ஜெபமாக ஏறெடுக்க வேண்டும் என்பது சட்டம்’ என்பதின் அடிப்படையில் தான் திருவிருந்து ஆராதனையின் ஜெபங்கள் எழுதப்பட்டது. எழுதப்பட்ட திருவிருந்து ஆராதனை முறைமையில் இறையியலுக்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. ஆண்டவராகிய இயேசுகிறிஸ்து ஏற்படுத்திய திருவிருந்திற்கு அநேக பெயர்களைக் கொண்டு இந்நாள் வரையிலும் நாம் அழைக்கின்றோம். எந்த பெயர் அதற்கு வழங்கப்பட்டாலும் அதனை மிகுந்த கனத்துடனும், பயபக்தியுடனும் நாம் அதனை ஆசரிக்க வேண்டுமென்பதே ஆண்டவர் நம்மிடம் எதிர்பார்க்கும் ஒன்றாகும்.



## மிஷனெரிகள் நடைமுறைப்படுத்திய கூட்டங்கள், திருவிழாக்கள்

# இன்றைய பணித்தளத்திலிருந்து ஒரு வரலாறு

இந்திய மிஷனெரிச் சங்கத்தின் (வருடம் 2012.) ஒரு பூர்வீக பணித்தளத்திலுள்ள சந்தாலி சபைகளுக்குப் பொறுப்பாளாராகிறார் ஒரு அருட்பணியாளர். சபைகளின் சூழ்நிலைகளைப் புரிந்துகொள்ள ஜெபத்துடன் முயற்சிக்கிறார். நான்கு சபைகளிலே, முக்கியமான ஒரு சபையின் ஆண்கள் பகுதி கிட்டத்தட்ட காலியாக உள்ளது. சபையில் வாலிபர்களே இல்லை. நான்கு சபைகளின் மத்தியிலும் வெளிப்படையான ஐக்கிய முயற்சிகள் இல்லை. சந்திக்கப்பட வேண்டிய சந்தாலி மக்களோ அக்கம்பக்கத்தில் இன்னும் ஐந்து மடங்கு இருந்தனர்.

ஒரியா மற்றும் இந்தி மொழிபேசும் மாநிலத்தின் பகுதியிலே, வீடுகளில் சந்தாலி மொழி பேசும் அவர்கள் தங்கள் தாய்மொழியிலேயே ஆராதனையை நடத்தினர் - அதையே விரும்பினர். ஆனால், வளரும் வாலிபர்களின் ஒரியா மற்றும் இந்தி மொழித் தாக்கம், ஆராதனை நடத்தும் விதத்திலே தேவையான மாற்றம் இவைகள் அவர்களைத் தலைமையேற்று நடத்திக்கொண்டிருந்த உண்மையும் பக்தியுமுள்ள மூத்த போதகருக்குப் புரியவில்லை, ஒலிபெருக்கி இல்லாத அந்த சபையில் அவரது மெல்லிய சத்தமும் பலரது காதுகளில் ஒலிக்கவில்லை. விளைவு, சபைக்கு வருவோரின் எண்ணிக்கை குறைவாயிருந்தது. இதை எப்படி சரிசெய்வது? சந்தாலி விசுவாசிகள் மத்தியிலே எப்படி ஒரு எழுப்புதலைக் கொண்டுவருவது?

கிறிஸ்தவரானதினால் தங்கள் பூர்வீகக் கொண்டாட்டங்களை விட்டுவிட்டிருந்த அவர்களுக்கு கிறிஸ்மஸ் நாட்கள் மட்டுமே ஒரு பெரும் கொண்டாட்டமாயிருந்தது. கிறிஸ்து பிறப்பின் பண்டிகையைத் தங்கள் சபைகளிலே வெளியூரிலிருந்தெல்லாம் வரும் விசுவாச உறவினர்களோடு கொண்டாடிய அவர்கள், தங்களுக்குத் தெரிந்த விசுவாசிகளின் இடங்களுக்கெல்லாம் மாலை நேரங்களிலே சென்று நடனமாடி வாழ்த்துச் சொல்லுவதற்கு அதிக செலவு செய்வார்கள், முயற்சி எடுப்பார்கள்.

கீத ஆராதனைகளோ, கிறிஸ்து பிறப்பின் நாடகங்களோ, வருங்கால சந்ததிகளுக்கு மனதில் நின்றாற் போல வேத சத்தியங்களை நிலைநிறுத்தும் முயற்சிகளோ அவ்வளவாய் இல்லாமலிருந்தது. அதிலும், சிறு சபைகளில் அதற்கான அடையாளமே இல்லை.

மூத்த அந்த போதகரையும் அந்தப் பகுதிக்குப் பொறுப்பாளராயிருந்த சுதேச ஊழியரையும் அழைத்து, ஜெபத்துடன் ஒரு ஐக்கியக் கிறிஸ்மஸ் விழா ஏற்பாடு செய்வதைக் குறித்து ஆலோசனை செய்தார் அந்த அருட்பணியாளர். நான்கு சபைகளும் சேர்ந்து நிகழ்ச்சிகளைக் கொடுக்கவேண்டும். யார் யார் என்ன தாலந்துகள் பெற்றுள்ளார்களோ அதின் அடிப்படையிலும், ஒவ்வொரு சபைக்கும் ஒரு சில நிகழ்வுகளும் கொடுக்க வேண்டும். என்ன பெயர் வைப்பது? சந்தாலி மொழியிலேயே "கிறிஸ்மஸ் ஐக்கியக் கூட்டம்" என்ற பெயருடன் துண்டு நோட்டீஸ் அடித்து, சேகரத்திலிருந்து மிகச் சிறிய உதவியுடன், அந்தந்த சபை விசுவாசிகளின் பங்களிப்புடன் முதல் ஆண்டு நிகழ்வு நடைபெற்றது.

மறைந்து கிடந்த பல தாலந்துள்ள, தலைமைப் பொறுப்பு எடுக்கத்தக்க விசுவாசிகள் கூடிப் பேசினார்கள், திட்டமிட்டார்கள், ஏன் சிற்றுண்டியும் அவர்கள் செலவிலேயே ஒழுங்கு செய்தார்கள்.

ஆலோசனை மட்டுமே ஊழியருடையது, செயல்படுத்தினவர்கள் அவர்கள்.

முதல் கூட்டத்திலே விருந்தினராக சென்ற அருட்பணியாளர் அந்தக் கூடுகையின் நோக்கத்தைத் தெளிவாக்கினார்.

ஏன் இந்தக் கொண்டாட்டம்?

**ஐக்கியமே நமது பெலம்.**

**அடுத்த சந்ததியை நாம் கிறிஸ்துவுக்குள்ளாய் வளர்க்கவேண்டும்.**

**சபையிலே இளைஞர்கள் செயலாற்றும் வாய்ப்புகள் இருக்கவேண்டும்.**

**சந்திக்கப்படாத சந்தாலி மக்களைக் குறித்து நாம் தரிசனம் கொள்ளவேண்டும்.**

விளைவு என்ன?

அற்பமாய் ஆரம்பித்த இந்த நிகழ்வு இன்று அந்த விசுவாசிகளின் முக்கிய நிகழ்வாய் மாறிவிட்டது. வருடந்தோறும் டிசம்பர் 26 ம் தேதி இந்தக் கூடுகை நடைபெறுகிறது.

இதே நோக்கத்துடன் ஆர்வம் மிகுந்த சந்தாலிப் பெண்களுக்காக வருடாந்திர ஒருநாள் கூடுகை! 'ஹோலி' என்னும் விடுமுறையன்று எல்லா சபைகளிலுமிருந்து கூடினார்கள், ஆடிப்பாடினார்கள், ஆர்வத்துடன் வசனத்தை தியானித்தார்கள். முதல் கூடுகையிலிருந்தே ஆண்கள் சமையலில் உதவிசெய்து, பெண்கள் கூட்டத்தில் கலந்துகொள்ளும் வழக்கம் உண்டாயிற்று.

வெவ்வேறு மக்களும், பல்வேறு சபைகளும் தங்கள் சுய பங்களிப்பை தியாகமாய், ஆர்வமாய், கொடுப்பதின் மூலமே இவைகள் சாத்தியமாயிற்று. ஆரம்பத்திலிருந்தே இந்தப் பழக்கமும் தெளிவுபடுத்தப்பட்டதினாலே, காலம் செல்லச் செல்ல, அவர்களாகவே திட்டமிடுகிறார்கள், நடத்துகிறார்கள். நம் விடுதியின் முன்னாள் மாணவர்கள் நிகழ்ச்சிகளைத் தொகுக்கிறார்கள். அருட்பணியாளருக்கு அங்கே வேலையே இல்லை! சபை தேவகிருபையால் தன் காலில் நிற்கத் துவங்கிவிட்டது.

இப்படி இன்னும் சில முயற்சிகள். ஆண்டவர் கிரியை செய்தார்.

சபையிலே இளைஞரின் பங்கெடுப்பு அதிகமானது. சபைக்கு வருவோரின் எண்ணிக்கை தேவ கிருபையால் அதிகரித்தது. ஆண்டவரை அறியாத தங்கள் மக்களைக் குறித்த பாரம் அதிகமானது. அவர்களுக்கும் வருடா வருடம் சுவிசேஷம் அறிவித்து அவர்களை ஆயத்தப்படுத்த இதுவும் ஒரு முயற்சியானது. அவர்களாகவே கூடி, தங்கள் உறவினர்களுக்குச் சுவிசேஷம் அறிவிக்கக் கடந்து சென்றார்கள். காலியாய்க் கிடந்த ஒரு சபையிலே பின்வாங்கிப் போயிருந்த 12 குடும்பத்தினர் திரும்பிவந்தார்கள். ஆர்வமிக்கத் தலைவர்கள் அடையாளம் காணப்பட்டுத் தன்னார்வமாய் சபை ஊழியம் செய்தார்கள். மூத்த அந்தப் போதகர் நான்கு சபைகளுக்கும் சென்று திருவிருந்து நடத்தி, அவர்களது ஆதி விசுவாசத்தை நினைவுபடுத்தினார், பெலப்படுத்தினார்.

**"எங்கள் சபை, எங்கள் பொறுப்பு"** என்று ஆரம்பித்த இந்த ஓட்டம் "எங்கள் மக்கள், எங்கள் பொறுப்பு" என்று மலர்ந்து, தொடர ஆரம்பித்தது! சவால்களின் மத்தியிலும், இன்னும் தொடருகிறது!

> "எங்கள் சபை, எங்கள் பொறுப்பு"

இன்றைய அருட்பணி சபைநாட்டுதலோடு நின்றுவிடுவதும், அருட்பணியாளர்கள் அதன்பின் என்ன செய்வதென்று தெரியாமல் திகைப்பதும், இதை ஈடுகட்ட ஊழியர்களை இடமாற்றம் செய்து இயக்கத் தலைவர்கள் திருப்தியடைவதும் பெருகிவிட்ட நாட்களிலே, கலாச்சாரம் குறித்த ஒரு விழிப்புணர்வின் தேவை அதிகமாயுள்ளது.

> "எங்கள் மக்கள், எங்கள் பொறுப்பு"

துரத்தப்படும் பிசாசு தான் விட்டுவந்த வீடு சுத்திகரிக்கப்பட்டிருந்தும் காலியாயிருப்பதைக் கண்டு, தன்னிலும் பொல்லாத வேறு ஆவிகளைக் கூட்டிக்கொண்டு வந்து, அங்கே மறுபடியும் குடியிருக்கும் என்கிற விஷயம் ஆழமான கலாச்சார உண்மைகளை விளக்குகிறது. பின்வாங்கிப்போகும் கிறிஸ்தவக் குடும்பங்கள் மற்றும் சமுதாயங்களின் காரணம் இதுவாகவும் இருக்கலாம்.

விழுந்துபோன மனிதர்களாகிய நமது எல்லாக் கலாச்சாரங்களிலும் காணப்படும் தீமைகளை சுவிசேஷம் மற்றும் தேவ வார்த்தை கொஞ்சம் கொஞ்சமாய் மறுமலர்ச்சியடையச் செய்கிறது. கிறிஸ்துவைப் பின்பற்றத் தீர்மானிக்கும் மக்கள் தங்கள் பழைய சில பழக்கங்களை விட்டு கிறிஸ்துவைப் பின்பற்றுகின்றனர்.

### ஒரு கலாச்சாரத்தின் நான்கு வித விஷயங்கள்
### எதை விடுவது? எதைத் தொடர்வது?

| வடிவம் | பொருள் | உதாரணம் | என்ன செய்வது? |
|---|---|---|---|
| தீயது | தீயது | குடிப்பழக்கம் | விட்டு விடவேண்டும் |
| தீயது | நல்லது | சிலை வணக்கம் | இயேசுவை வணங்குதல் |
| நல்லது | தீயது | தொலைக்காட்சியில் தீயநிகழ்ச்சிகள் கண்டுகளித்தல் | நல்லநிகழ்ச்சிகள் பார்த்தல் |
| நல்லது | நல்லது | கல்வி கற்றல் | தொடரட்டும்! |

உதாரணமாக, 'கூடுகை' என்பது தவறல்ல, ஆனால் 'எங்கே' கூடுகிறோம் மற்றும் 'எதற்காகக்' கூடுகிறோம் என்பதை வைத்தே ஒரு கூடுகையின் நன்மை தீமை தீர்மானிக்கப்படுகிறது. மனித சமுதாயத்திற்குக் கூடுகைகள் அவசியம். பண்டிகைகளையும், விசேஷித்த நாட்களையும் அவைகளின் நோக்கங்களையும் குறித்து வேதாகமும் சொல்லுகிறது.

கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளும் பலர் தங்கள் கடந்தகால வாழ்க்கையை விட்டு மனம் திரும்பி, ஒரு புதிய வாழ்க்கை முறைக்குள் வரும்போது சில கூடுகைகளையும், பண்டிகைகளையும் இழக்கிறார்கள். அது அவர்கள் வாழ்க்கையிலே ஒரு ஆபத்தான வெற்றிடத்தையும், காலப்போக்கிலே ஒரு விரக்தியையும் ஏற்படுத்தக்கூடும். விவேகமுள்ள அருட்பணியாளர்கள் இந்த வெற்றிடங்களைக் கண்டறிந்து, அதை ஈடுசெய்யும் அதே நேரத்தில் ஆவிக்குரிய நோக்கங்களுள்ள கூடுகைகளையும் ஏற்படுத்தவேண்டும்.

அது கிறிஸ்துவைப் பின்பற்றத் துணியும் புதிய மக்களின் மாற்றத்தைக் கொஞ்சம் எளிதாக்கும், கிறிஸ்தவத்தை அவர்களது கலாச்சாரத்திலேயே உறுதிப்படுத்தும். நிலைத்திருக்கும் சபைகளை ஸ்தாபிப்பதற்கு இது ஒரு முக்கியமான அணுகுமுறை.

**சாமுவேல் ஆபிரகாம் .V**

**ஐக்கியமே நமது பெலம்.**



## சந்திரா மனோகரன்

ஆசிரியர் இதழாளர் / பதிப்பாளர்
அருளமுது/புதிய சிகரம் இதழ்கள்

திசை தெரியாமல்  திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும் என்பதையே குறிக்கோளாகக் கொண்டு, வரலாறு படைத்துவரும் கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் மாத இதழ், இரண்டாண்டுகள் கடந்து இப்போது மூன்றாவது ஆண்டில் சுவடு பதிக்கவுள்ளது. ஒவ்வொரு மாதமும், ஒவ்வொரு தலைப்பில் கிறிஸ்தவ வரலாறு சார்ந்த கட்டுரைகளும், துணுக்குகளும், கிறிஸ்தவம் தழைத்தோங்குவதற்கு வேர்களாகத் திகழ்ந்த நற்செய்திப் பணியாளர்களின்  ஊழியங்கள் பற்றிய அரிய செய்திகளையும், அவர்கள் எதிர்கொண்ட சவால்கள் மற்றும் ஆற்றிய அருந்தொண்டுகள், பல்வேறு ஆலயங்களின் படங்கள் மற்றும் வரலாறு ..... இன்னும் கிறித்தவ நூல்கள் குறித்தான அறிமுகம் போன்றவைகளைத் உள்ளடக்கி, வண்ணத் தாளில்  வடிவமைத்து பாதுகாப்புப் பெட்டகமாக வெளிவந்து கொண்டிருக்கிறது.

கிறிஸ்தவர்கள் மத்தியில் பேசும்பொருளாக விளங்கிக்கொண்டிருக்கும் இதழின் வடிவமைப்பாளர். சுஜித் ரெக்ஸ் ஆசிரியர்.மன்னா செல்வகுமார். இதழ் மேலும் சிறக்கவும், அறியப்படாதவர்கள் மத்தியில் அறியப்படவும் இதழாசிரியர் உரிய முயற்சிகள் மேற்கொண்டுவருவது பாராட்டுதலுக்குரியது . இதழின் முகம் மேலும் ஜொலிக்க வாழ்த்துகிறேன்.



## வி. மிரியாம் கயல்விழி

'நமக்கு எப்படி கிறிஸ்துவின் நற்செய்தி கிடைத்தது? அதற்குப் பின்னாக கடுமையான உழைப்புகளை கொடுத்தவர்கள் யார் யார்? அவர்கள் ஏன் அப்படிச் செய்தார்கள்? அவர்களை அப்படிச் செயல்பட உந்தி தள்ளியது எது? அதற்காக அவர்கள் சந்தித்த பெரிய சவால்கள் என்னென்ன? இன்றைக்கு சுலபமாய் அவர்களின் கனியை சுவைக்கும் நாம் நம்முடைய பங்காக இந்த சமுதாயத்துக்கு என்ன செய்ய வேண்டும்?..' இப்படி பல கேள்விகளுக்கான விடைகளை விரல் நுனியில் வைத்திருக்க வேண்டிய இன்றைய நம் தமிழ் கிறிஸ்தவ சமுதாயம், ஏனோ அதை கொஞ்சம் கொஞ்சமாய் இழந்துபோய் கொண்டிருக்க, இதுவே அதை அவர்களுக்கு புகட்டும் காலம் என்று சரியான நேரத்தில் உணர்ந்து, 'திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும்' என்ற நோக்கத்தோடு துவக்கப்பட்ட இந்த 'கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்' மாத இதழ், பலவித போராட்டங்கள் தடைகள் இவைகளை வெற்றிகரமாய் மேற்கொண்டு, மூன்றாம் ஆண்டுக்குள் நுழைவது மிக்க மகிழ்ச்சி. அதனால் இந்த சிறப்பான பணியை செய்து வரும் சகோ. மன்னா செல்வகுமார் அவர்களுக்கும் அவர்களது குழுவினருக்கும் எனது மனமார்ந்த வாழ்த்துகள்.! கர்த்தர் தாமே அவர்கள் பணி சிறக்கவும், இவ்விதழுக்கு இன்னும் அநேக வாசகர்கள் கிடைக்கவும், சரியாய் தொடர்ந்து நடத்துவதற்கான அனைத்து தேவைகளும் அவர்களுக்கு சந்திக்கப்படவும் கிருபை புரிவாராக.!

தமிழ் நாட்டின் தனிப்பெரும் நாவலாசிரியர்

அ மாதவையா அவர்களின்

# கிளாரிந்தா

தமிழ்நாட்டில் வெளி வந்த முதல் வரலாற்று நாவல்

தொடர் –15

**நிபந்தனை**

ஒட்டுக் கேட்கவேண்டும் என்ற எண்ணத்துடன் அங்கு வந்து நின்றவள் அல்ல அவள். அன்று இருந்த சூழ்நிலையில் அவள் அப்படிச் செய்திருந்தாலும் அது மன்னிக்கப்பட வேண்டிய குற்றமே. திவான் தம் ஜாதகத்தைப் பார்த்து விட்டு தாம் இனிமேல் ஒருமாதத்துக்கு மேல் பிழைத்திருக்க மாட்டார் என்று சொன்னதாக கமலாபாய் அன்று காலை தான் கிளாவிருந்தாவிடம் சொல்லியிருந்தாள்.

செய்தியைக் கேட்டு அவள் பீதி அடைந்து போனாள். இளம் விதவையாகப் போகிறோமோ என்று பயந்தாள். இந்த எண்ணத்தினால் அவர்மீது சற்று அன்பு உண்டாயிற்று. இப்படி பிரிக்கப்பட்டுப் போகிறோமே என்று வருந்தினாள். அவருடன் பேசி, தான் அவருக்குத் துரோகம் செய்யவில்லை என்பதை அவரை எப்படியாவது நம்பவைக்கவேண்டும் என்று விரும்பினாள். மனதால் அவள் களங்கப்பட்டவள் என்பது உண்மைதான் என்று அவளும் ஒப்புக்கொண்டாள். ஆனால் மனம் ஒரு குரங்கு அல்லவா? ஆனால் அவள் கணவர் சந்தேகித்ததுபோல, அவள் சொல்லாலும் செயலாலும் கறைபடாதவள். எப்படியாவது அவரோடு சமாதானமாகி சோரம்போன தன் மனதுக்காகவும் பிராயச்சித்தம் செய்து கொள்ளவேண்டும் என்று நினைத்தாள். பிற்பகலில் கமலா பாய் தூங்கச் சென்றுவிட்டாள். கணவரின் அறைக்குச் செல்வதற்கு அதுவே உகந்த வேளை என்று அவள் திவானின் அறையை நோக்கி வந்தாள். கதவு அடைத்திருந்தது. திறக்கலாம் என்று கையெடுத்தபோது உள்ளிருந்து அவள் மைத்துனரின் குரலைக் கேட்டாள். நான் என்ன அத்தனை முட்டாளா, அண்ணா? சிறிது நின்றாள். அப்பொழுது திவான் தாம் சந்நியாசியை ஏமாற்றத் தயாரித்த பொய் ஜாதகத்தைப்பற்றிக் குறிப்பிட்டார். அவளுக்குத் தன் காதுகளை நம்ப முடியவில்லை. அவள் பிஞ்சு இதயத்தில் கசப்பு பொங்கியது. ‘இப்படிப்பட்ட ஒரு மனிதனுக்கா மனைவி ஆனேன்?’ எண்ணங்கள் சுழன்றன. அதன் பின் அமாத்யா தம் தமையனாரை வாழ்த்தியது அவள் காதில் விழவில்லை. திடீரென்று உள்ளே இருந்து கதவு திறந்தது தெரிந்தது. அவள் இயந்திரம்போல் வேகமாக வீட்டினுள் சென்றுவிட்டாள்.

அவரோடு சமாதானம் செய்து கொள்ளவேண்டும் என்ற ஆசையெல்லாம் இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது. வேண்டுமென்றே கள்ள ஜாதகம் தயாரித்து பாபாஜியை ஏமாற்றி ஆஸ்தியை அடைவதற்காக என்னைக் கலியாணம் பண்ணினாரா? இவ்வளவு சூதும், சுயநலமும் உள்ளவரா? இதயம் என்பதே இல்லையே? அவர் தந்த அவல வாழ்வு, இனி தரப்போகும் விதவைக் கோலம் இவருக்கு மனைவியாக இருப்பதைவிட, விதவையாக ஆவது உசிதம்போலும். அமாத்யாவும் இந்தச் சூழ்ச்சியை அறிவார். அண்ணாவுக்கு ஏற்ற தம்பி. ஒருவேளை மாதவனும் இப்படித்தான் இருப்பானோ? அப்பாவையும், பெரியப்பாவையும் போல? இல்லை; மாதவன் இப்படி கொள்கைகள் அற்ற அற்பனாக ஒருநாளும் இருக்கமாட்டான். ஆசை உள்ளூற நெஞ்சை அரித்துக்கொண்டே இருந்தபோதும், அவன் தன்னிடம் எவ்வளவு கௌரவமாக நடந்து கொண்டான். அந்தக் கடைசிச் சம்பவம் எப்படியோ அவனையும் மீறிய ஒரு வெறியின் விளைவே அன்றி வேறல்ல. அது அவனுடைய உத்தம நடத்தையையும், கண்ணியத்தையும் துலாம்பரமாக அல்லவா எடுத்துக்காட்டுகிறது.!



இப்படியே மாதவனைப் பற்றிய எண்ணங்களில் சிறிது நேரம் ஆழ்ந்துவிட்டாள். அந்த எண்ண வெள்ளம், கணவன் மீது தோன்றிய வெறுப்புணர்ச்சியை அடித்துச் சென்று ஆழ்த்தி விட்டது. ஆனால் அவர் மரணத்தைப்பற்றி, கமலாபாய் சொன்னபடியே அவரும் சொன்னாரே! அதற்குப்பிறகு அவள் கதி என்ன? அவள் அம்மாவின் நினைவு வந்தது. அப்பா இறந்த செய்தியைக் கேட்டதும் அவள் கதறினாளாம். அந்த ஒரே கதறலில் தன் கணவரிடம் போய்ச் சேர்ந்து விட்டாளாமே. அவள் உத்தமி, சதி என்று எல்லாரும் அவளைப் புகழ்கிறார்கள்.

என் விஷயம் முற்றிலும் வேறு. இப்படிப்பட்ட கணவரோடு இப்படிப்பட்டஒருவாழ்வுவாழ்ந்துவிட்டுசதியாகஉயிர்விடுவதென்றால் பொருத்தமாகவே இல்லை. கேலிக் கூத்தாகக்கூடத் தோன்றுகிறது. என் விருப்பத்துக்கு விரோதமாக என் மறுப்புகளைச் சட்டை செய்யாமல் என்னை மணந்தார். அதற்காக ஏமாற்றவும் செய்தார். வாழ்வு முழுவதும் என்னிடம் கொடுமையாகவும் இரக்க மில்லாமலும் நடந்துகொண்டிருந்திருக்கிறார். இப்பொழுது அவர் மரணப்படுக்கையிலிருக்கும்போது அவரோடு பேச்சு வார்த்தைகூடக் கிடையாது. நான் அவர் எதிரில் வருவதையும் தடைசெய்திருக்கிறார்.

என்னைப் பொறுத்தவரையில், எனக்கு அவரிடம் எப்பொழுதும் வெறுப்பு. அவருடைய நடவடிக்கைகளினால் அது வளர்ந்துகொண்டே வந்திருக்கிறது. இப்பொழுது நான் இன்னொரு ஆடவனைக் காதலிக்கிறேன்.

உலகம் என்னவானாலும் நினைக்கட்டும். ஆனால் கடவுள் நியாயமானவராக இருந்தால் எங்கள் கல்யாணத்தைத் திருமணம் என்று சொல்லமாட்டார்.

அவர் மரணத்துக்குப்பின் நான் ஆயுசு பூராவும் விதவையாகக் காலம் கழிப்பேன். கமலாபாய் இந்த வீட்டைவிட்டுப் போய்விடுவாள். நான் இந்த வீட்டுக்கு எஜமானியாக இருப்பேன். மைத்துனர் அமாத்யா காரியங்களை நிர்வாகம் செய்துவருவார்.

என் சொத்துரிமை மகனுக்குச் சேரவேண்டும் என்று இச்சிப்பதால் என்னை ஓரளவு மரியாதையாக நடத்தி வருவார். மாதவன் வந்திருப்பான். அவன் சுவீகாரம், பூணூல் கல்யாணத்துக்காக இப்பொழுதே வந்துவிடுவான்.அப்புறம் அவள் இதயம் வேகமாக அடிக்கத் தொடங்கியது. கோட்டையை மேலும் உயரமாகக் கட்டிக் கொண்டுபோக அவளுக்குத் துணிவு இல்லை.

ஆனால் இவ்வளவு ரம்மியமான இடத்துக்கு மிக அருகில் வந்துவிட்ட பிறகு கற்பனை வேகத்தை நிறுத்தவும் அவளால் இயலவில்லை. ஆகவே அது முடிய வேண்டிய இடத்தில் முடிந்துவிட்டுதான் நின்றது.

அன்று அவன் அளித்த முத்தம் ஒருவித பரபரப்பையும் பிரகாசத்தையும் இப்போது தோற்றுவித்தது. இந்தப் பகற் கனவு நிலையில் தன்னை யாரும் பார்த்துக்கொண்டிருக்கிறார்களோ என்று பயத்துடன் சுற்றும்முற்றும் பார்த்தாள். சற்றுத்தள்ளி ஊஞ்சலில் கமலாபாய் குறட்டை போட்டுக் கொண்டிருந்தாள்.

தங்கள் இருவருக்கும் உள்ள பொருத்தத்தை அவளால் நினைத்துப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. நானும் அவளைப்போல் விதவையாக இருப்பேன். முறையற்ற ஒரு உறவில் இன்பம் காணுவேன். அதுவும் அல்லாமல் ஒரு பாவமும் அறியாத இன்னொரு பெண்ணுக்கு எல்லையில்லாத துன்பம் விளைவிப்பேன். நான் மாதவனின் ஆசைநாயகியாகிவிட்டால் மாதவனின் அந்தச் செல்வந்தச் சிறு மனைவிக்கு எப்படி இருக்கும்? நான் என் கணவரை வெறுத்து வந்தபோது கூட, அவர் கமலாபாயோடு உறவாக இருந்ததை என்னால் சகித்துக் கொள்ளவே முடிந்ததில்லை. அவள் மீது மிகுந்த பொறாமைப்பட்டேன். சுந்தரிபாயோ மாதவனை மனமாரக் காதலிப்பாள். (அவனைக் காதலிக்காத பெண்ணும் உண்டா என்ன?) அப்படியிருக்கும்போது அவளுடைய பவித்திரமான உரிமையை நான் பறித்துக்கொண்டால், அவள் எவ்வளவு வேதனை அடைவாள். எது வந்தாலும் சரி, இன்னொரு பெண்ணுக்குத் துன்பம் இழைக்கமாட்டேன். அவசியமானால் நான் தற்கொலையும் செய்து கொள்வேன்.

அப்பொழுதுதான் பழியும் பாவமும் நிறைந்த இந்த உறவிலிருந்து மாதவனுக்கு விடுதலை கிடைக்கும். திருமணத்தால் ஒன்றுசேர்ந்து மனைவியுடன் அவன் மகிழ்ச்சியுடன் இல்லறம் நடத்தட்டும். ஆம் தற்கொலை ஒன்றுதான் ... ஐயோ, ஆனால் இவ்வளவு சின்ன வயதிலா?

சாவதை நினைத்தாலே அவள் உடல் நடுங்கிற்று, பயத்தால் உள்ளம் உறைந்துபோயிற்று, வேறு வழியே இல்லையா?

ஏன் இல்லை? சிறப்பான வழி ஒன்று இருக்கிறதே. அதை ஏன் இதுவரை நினைக்கவில்லை. இந்தப் பாழும் காதல் என் கண்களைக் குருடாக்கிவிட்டது. உப்பூர் மூலமாக அறப்பணி நிறுவ இப்பொழுது மகாராஜா முயற்சிகள் ஏதும் செய்யாதுபோனால், என் ஸ்திரீதனமான மலையூரின் வருமானத்தைக்கொண்டு பாபாஜியின் கடைசி விருப்பங்களை நிறைவேற்றி அவைகளை ஒழுங்காக நிர்வகித்துவர என் ஆயுள் முழுவதும் சரியாக இருக்குமே. இந்தப் புண்ணிய காரியங்களினால் மனம் நிறைவு பெறுவேன். என் ஆயுளுக்குப் பின்னால் அவற்றைக் கவனித்து வரவும் தகுந்த தர்மகர்த்தாக்களுக்கும் ஏற்பாடு செய்வேன். குழந்தை இல்லாத செல்வந்த இளம் விதவைக்கு இதுவே சிறந்த பாதையாகும். பாட்டனாரின் நினைவைப் போற்றுவதாகவும் இருக்கும்.

இந்த அறப்பணிகளைச் சரிவரச் செய்யவேண்டுமானால், திவான் இறந்தபின் தஞ்சையைவிட்டுப் போய்விடவேண்டும். சிதம்பரமோ, மதுரையோ அல்லது வேறு எங்கேனும் நெடுந் தொலைவில் போய்விடவேண்டும்.

இவ்வாறு ஒன்றன்பின் ஒன்றாக எண்ணங்கள் வந்து கொண்டே இருந்தன. கமலாபாய் விழித்து ஊஞ்சலைவிட்டு இறங்கி திவானின் அறைக்குச் சென்றதை அவள் கவனிக்கவே இல்லை. திடீரென அங்கிருந்து கமலாபாய் இவளைப் பெயர் சொல்லி அழைத்தது கேட்டது. உடனே வெந்நீர் கொண்டு போகவேண்டுமாம் நோயாளியின் அறைக்கு. திடீரெனத் தன் பணிவிடைக்கு என்ன தேவை வந்தது என்று எண்ணியவாறு வெந்நீர் எடுத்துச் சென்றாள். திவான் கால்களை நீட்டியவண்ணம் கட்டிலில் படுத்திருந்தார்.

கமலாபாய் அருகிலிருந்து கால்களைப் பிடித்துவிட்டுக் கொண்டிருந்தாள். இவள் அருகில் சென்றதும் இவளிடமிருந்து வெந்நீர்ப் பாத்திரத்தை வாங்கி, திவானின் அடிவயிற்றுக்கு ஒத்தடம் கொடுக்கத் தொடங்கினாள். கிளாவிருந்தா கட்டிலின் கால்மாட்டில் அமைதியாக நின்றவண்ணம் திவானைப் பார்த்தாள். அவர் உடல் வெளுத்து மெலிந்து போயிருந்தார். அவள் அவரைப் பார்த்துப் பத்து நாட்கள் ஆகியிருந்தன. இந்த இடைவெளிக்குள் அவர் மிகவும் இளைத்துப் பலவீனமாகியிருந்தார். கண்கள் உள்ளே போயிருந்தன. இவளைப் பார்த்ததும், வேதனை அடைந்தவர்போல சோர்வுடன் கண்ணை மூடிக்கொண்டார். பின் கமலாபாயிடம் மெல்லிய குரலில் அவளிடம் கேள்' என்றார்.

கமலாபாய் ஒத்தடம் கொடுப்பதை நிறுத்தாமல் அவளை ஏறிட்டும் பார்க்காமல் 'கிளாவிருந்தா', என் அத்திம்பேர் நிலைமை கவலைக்கிடமாக இருக்கிறது. வேளையும் சரியாக இல்லை. விதி எப்படி இருக்கிறதோ. ஆதலால் நாராயணனை உடனே சுவீகாரம் செய்துகொள்ள வேண்டும் என்று விரும்புகிறார். அடுத்த மாதம் 5ம் தேதி அந்தச் சடங்கை நடத்த இருக்கிறார். இது அவர் கடைசி விருப்பமாதலால் (இங்கே அவள் குரல் சற்று நடுங்கிற்று. இடதுகை

முட்டியால் கண்ணைத் துடைத்துக்கொண்டாள்) நான் சம்மதித்து விட்டேன். என் தம்பியின் குழந்தையைத் தத்து எடுக்கும் விருப்பத்தை விட்டுக்கொடுத்துவிட்டேன். எல்லாவற்றையும் பார்க்கிறபோது- உன் சம்மதத்தையும் விரும்புகிறார். நீயும் இணங்கிவிட்டால்- கடைசி காலத்திலாவது அவர் மனம் அமைதி அடையும்.' கடைசி காலத்திலாவது என்ற வார்த்தைகளுக்கு ஒரு வக்கிர அழுத்தமும் கொடுத்தாள். அது கிளாவிருந்தாவின் மனதை இளகச் செய்யும் என்று நினைத்துக்கொண்டாள்.

'என் சம்மதமும் தேவைப்படுகிறதா? நான் என்ன இந்த வீட்டில் அப்படி ஒரு பொருட்டாகவா இருக்கிறேன்? நான் இந்த வீட்டில் ஓர் அடிமையாகவும் அவருக்கு வேலைக்காக அல்லவா இருக்கிறேன். அவர் எது வேண்டுமானாலும் செய்து கொள்ளலாம்' என்றாள் கிளாவிருந்தா.

அப்படி அல்ல. என் அத்திம்பேர் யாரை வேண்டுமானாலும் கவீகாரம் செய்து தன் சொத்துக்கு உரிமை ஆக்கலாம் ஆனால் இப்பொழுது அவர் உன்னுடைய ஸ்திரீதனச் சொத்தும் நாராயணனுக்குச் சேரவேண்டும் என்று விரும்புகிறார். அதனால் தான் நீ அவனை உன் மகனும் வாரிசுமாக ஒப்புக்கள் வேண்டும் என்று சொல்லுகிறார்' என்றாள் கமலாபாய்

என் நாயகர் என்னைக் கல்யாணம் செய்தாரா? அல்லது என் சொத்தைச் செய்துகொண்டாரா? நான் இந்த வீட்டில் தேவையில்லாத ஓர் அந்நியளாகிவிட்டேனே. என் சொத்து மாத்திரம் தன் தம்பி மகனுக்குச் சேரவேண்டும் என்று ஆசைப்படுவதில் என்ன நியாயம் இருக்கிறது?' என்றாள் கிளாவிருந்தா.

'கலியாணத்தின் மூலமாக நீயும் உன் சொத்தும் அவர் உடைமைகள். அவர் உன்னை நன்றாக நடத்துவதும் நடத்தாததும் அவருடைய இஷ்டம்', என்றாள். பின் சற்று இளக்காரமாக, 'தன்னை நன்றாக நடத்தவேணும்; தன்னைக் கலந்துதான் எல்லாம் செய்யவேணும் என்று ஒரு மனைவி புருஷனிடம் கேட்கலாமா?' என்றாள்.

'ஆமாம், மனைவி எப்படிக் கேட்பது? அது மற்றவர்கள் உரிமை அல்லவா?' என்றாள் கிளாவிருந்தா கசப்புடன், அம்பு சரியாகச் சென்று தைத்தது.

கமலாபாய் அகங்காரம் அடைந்தவளாய் 'துக்கிரிக் கழுதை, இந்த வீட்டில் இருக்கத்தானும் உனக்கு யோக்கியதை உண்டா ? கழுத்தில் தாலி ஏறாமல் நின்று தவிக்கிறாயே என்று அத்திம்பேர் பாவம் பார்த்து உன்னைக் கல்யாணம் செய்தார். நீ வந்ததிலிருந்து வரிசையாக கஷ்டம் வந்துகொண்டிருக்கிறது. முதலில் கங்கா-ஒண்ணே ஒண்ணு, கண்ணே கண்ணு என்று இருந்தாள்-பாவி நீ அவளை அனுப்பிவைத்து விட்டாய். இப்பொழுது அடிமரத்தையே சாய்ச்சுடலாம் என்று பார்க்கிறாய். மகன் என்றும் பாராமல் மாதவனோடு கொட்டம் அடிச்சியே-அதுக்கு வேறு யாராக இருந்திருந்தால் இந்நேரம் உன்னைச் சாணியைக் கரைத்து ஊற்றி வாரியலால் அடித்து தெருவில் விரட்டியிருப்பார்கள். பாவம் அத்திம்பேர், குடும்பகௌரவத்துக்காகஅதைப்பொறுத்துக்கொண்டார். உங்க தாத்தா மாதிரி எங்களுக்கும் நேத்து வந்த அந்தஸ்து என்று நினைத்தாயோ? அவர் சாகக்கிடக்கிறாரென்றும் பார்க்காமல் அவர் மூஞ்சிக்கு எதிரே இப்படியெல்லாம் பேசுகிறாயே கிராதகி. பெண்ணுக்கு வேண்டிய வெட்கம் அடக்கம் மரியாதை ஏதாவது இருக்கிறதா பார், அற்பம்' என்று பொரிந்தாள்.

'ஆமாம், இந்த வீட்டில் வெட்கம் கெட்டவள் நான் ஒருத்திதான்' என்று கிளாவிருந்தா அழத்தொடங்கினாள். கற்பு கெட்டவள் என்று கமலாம்பாள் நிந்தித்தது அவள் வேதனையைக் கிளறிவிட்டது.

அவள் அழுவதைப் பார்த்துவிட்டு திவான் 'நான் போனபிறகு அழச் சொல்லு, பார்க்கிறவர்களாவது உத்தமி என்பார்கள்' என்றார் கொடுமையாக. பின் கமலாபாயைப் பார்த்து 'சுவீகாரத்துக்குச் சம்மதிக்கிறாளா இல்லையா என்று முடிவாகக் கேட்டுவிடு. இரண்டில் ஒன்று தெரிந்து விட்டால், பின் நான் செய்யவேண்டியதைச் செய்துகொள்வேன்' என்றார்.

அவர் தன்னிடம் நேரடியாகப் பேசாமல் கமலாபாய் மூலம் பேசியதால் தான் அவமானப்படுத்தப்படுவதை உணர்ந்தாள். கர்வமும் கோபமும் அடைந்தாள்.

'நான் திரும்பவும் சொல்வதற்கு என்ன இருக்கிறது? என் நாயகர் அவர் விருப்பப்படி சுவீகாரம் செய்து தன் சொத்துக்கு அவனை உரிமையாக்கிக்கொள்ளட்டும். என்னுடைய ஸ்திரீதனச் சொத்தை என் பாட்டனாரின் விருப்பப்படி தர்ம காரியங்களில் செலவிட எண்ணியிருக்கிறேன். அவருடைய நினைவாகக் குறைந்தபட்சம் இதையாவது செய்யவேண்டும். சொத்து என் பாட்டனார் சம்பாதித்து எனக்கு வைத்துச் சென்றது. மகாராஜாவின் அனுபோகத்தில் இருந்துவரும் கிராமத்தால் அந்த அறம் பணியைச் செய்ய முடியாது போல் தோன்றுகிறது. அதனால் தான் என் ஸ்திரீதனச் சொத்தை அதில் செலவிடலாம் என்று கருதுகிறேன். என் நாயகர் என் நடத்தையை சந்தேகிக்கிறார். கோள் சொல்லுகிறவர்கள் அவர் மனதைக் கலைத்துவிட்டார்கள். ஆண்டவர் - ஒருவன் இருக்கிறான் அவன் எல்லாவற்றையும் .....”

'போதும் அவளை அறையைவிட்டுப் வெளியே போகச் சொல்லு. நான் செத்த பிறகுகூட அவள் என் முகத்தில் விழிக்க வேண்டாம் என்று திவான் கத்தினார். கைகளால் இரு காதுகளையும் பொத்திக்கொண்டார். பின் சோர்வுடன் கண்ணை மூடிக்கொண்டார். கமலாபாய், 'ஐயோ அவர் நிலைமையை இன்னும் மோசமாக ஆக்கிவிடுவாள் போலிருக்கிறதே. ஓடிப்போ வெளியே. இதுக்கா உன்னைக் கூப்பிட்டோம்? பாம்புக்குப் பால் வார்த்தாலும் விஷத்தைத்தான் கக்கும். போடீ, போயிடு - அவர் சொன்னதுபோல உன் முதலைக் கண்ணீரைப் பிறகு வடிக்கலாம்' என்றாள் ஆத்திரமாக. கிளாவிருந்தா துயரமும் கோபமும் நெஞ்சை அடைக்க அறையைவிட்டு வெளியே வந்தாள்.

**கமலாபாயின் கண்டுபிடிப்பு**

அரசர் இறைவனடி சேர்ந்தார். அரசர் நீடூழி வாழ்க! பிரதாப் சிங் காலம் ஆனதும் அவர் மகனான துளசாஜி அரியணை ஏறினார். அவரிடம் துக்கம் விசாரிக்கவும் அவரை வாழ்த்தவும் பற்பல இடங்களிலிருந்தும் அதிகாரிகள் வந்தனர். பட்டுக்கோட்டை சுபேதாரான மாதவராவும் அவர்களில் ஒருவன். நாராயணனின் சுவீகாரமும் உபநயனமும் நடந்து முடிந்திருந்தது. மாதவன் அப்பொழுது வரவில்லை.

திவான் தன் மரணத்துக்குக் கெடுவாக வைத்திருந்த நாளைக் கடந்து விட்டார். ஆனால் கண்டம் தப்பிவிட்டால் இன்னும் ஏழு வருஷங்கள் சுக வாழ்வு உண்டு என்று சொல்லியிருந்த சோதிடம் பொய்த்துக் கேலியாகிக்கொண்டிருந்தது.

கெடு வைத்த அன்று, கமலாபாயும் அவள் உறவு

பெண்களுமாகச் சேர்ந்து மாரடித்துப் பெரிய ஓலம் எழுப்பிக் கொண்டிருந்தார்கள். கிளாவிருந்தாவும் பயந்து அழுதாள். ஆனால் சனியின் அனுக்கிரஹத்தால் திவான் அந்த நாளை தாண்டிவிட்டதால் வீட்டில் கூடியிருந்த உறவினருக்கு சற்று வருத்தம்தான்.

மாதவராவ் தன்னைப்பார்க்க வரவேண்டாம் என்று சொல்லிவிட்டார். அவனைத் தன் வீட்டுக்குள் நுழையவிட கூடாது என்றும் உத்தரவு போட்டார். மறுபடி அந்த மாதிரி ஏதாவது நடந்துவிடாமலிருக்கும்படி கமலாபாய் அவர்களைக் கண்காணித்து வரவேண்டும் என்றும் எச்சரிக்கை செய்திருந்தார்.

நாராயணனுக்குச் சொத்துரிமை தர கிளாவிருந்தா சம்மதித்துவிடுவாள் என்று இன்னும் சிறிது நம்பிக்கை திவானுக்கு இருந்தது. பத்திரம் எழுதிக்கொடுத்துவிடும்படி பலவிதத்திலும் ஓயாமல் வற்புறுத்தி வந்தார்கள்.

திவானின் உடல் நலம் இரு குடும்பத்தினருக்கும் பெருவியப்பாக இருந்துவந்தது. கிரஹங்களை வென்று கண்டம் பிழைத்துக்கொண்டார் எனினும் குணமடைவதற்கான எந்த அறிகுறியும் இன்னும் ஏற்படவில்லை. அபாய எல்லையிலேயே படுத்த படுக்கையாக இருந்துவந்தார். இன்னும் ஏழு வருஷம் உண்டு என்ற சோதிடம்கூட தவறாகப் போகுமா? கமலாபாயால் இந்தமாதிரி வேளையில் பொறுமையாக இருக்க முடியாது. பெருத்த சிந்தனை செய்ததின் பேரில் ஒரு முடிவுக்கு வந்துவிட்டாள். அதைப்பற்றி மேலும் நினைக்க நினைக்க, அவளுக்குத் தான் கொண்ட மகா பாதகமான கருத்து சரியானதென்றே தோன்றிற்று.

கிரஹங்கள் சாதகமாக இருந்தும் திவான் குணமாக வில்லையென்றால், யாரோ அவர் உயிரை வாங்க செய்வினை வைத்திருக்கவேண்டும். திவான் சாகவேண்டும் என்று விரும்புகிறவர்கள் இப்பொழுது வேறு யார் இருக்கிறார்கள், அவர் மனைவியைத்தவிர? ஏன் இதுவரை அவள் மூளையில் இது படாமல் போய்விட்டது என்று ஆச்சரியப்பட்டுக் கொண்டாள்.

சோதிடப்படி திவான் சாவதாக இருந்த அன்று, பிச்சைக்கு வந்த கோடங்கி ஒருவனிடம் கிளாவிருந்தா பேசிக்கொண்ருந்தாள். மற்றுமொரு நாள் கிளாவிருந்தா தன் தாய்வழி உறவினளும், சற்று வக்கிரமுகம் உடையவளுமான ஒரு விதவைப் பெண்ணோடு நெடுநேரம் தனித்துப் பேசிக்கொண்டிருந்தாளே. சாரதா வேறு இப்பொழுதெல்லாம் ஏதோ காரியமாக அடிக்கடி வீட்டைவிட்டு வெளியே செல்கிறாள். பல மணி நேரம் கழித்துத்தான் திரும்புகிறாள். இரண்டு இரவுகள் அவள் வீட்டில் தூங்கவில்லை. கிளாவிருந்தாவுக்கு (ஸ்திரீதனச் சொத்து இருந்ததே தவிர) ரொக்கப் பணம் எதுவும் கையில் கிடையாது. திவானும் அவள் கைச் செலவுக்குக் காசு கொடுப்பதில்லை. அண்மையில் தன் கனமான மோதிரம் ஒன்று தொலைந்து போய்விட்டதாகக் கிளப்பிவிட்டாள். ஆம், செய்வினைக்கு ஆன செலவுக்காக வேலைக்காரிக்கும் உறவினருக்கும் கொடுப்பதற்காக அந்த மோதிரத்தை விற்றிருக்கவேண்டும். சுதந்திரமாக இருக்க வேண்டும். தன் சொத்தைத் தன் விருப்பப்படியே செலவழிக்க வேண்டும் என்ற ஆசைகள் உள்ளவள். கணவன் உயிரோடு இருந்தால் அது நடக்குமா? ஆகையால் ஜாதகப்படி அவர் பிழைத்து எழுந்துவிடக்கூடாதே என்று அதற்குத் தடங்கல் செய்து அவரைத் தொலைத்துவிடுவதற்கான காரியத்தில் முனைந்துவிட்டாள். இப்படியாக கமலாபாயின் மூளை வேலை செய்தது. முதலில் உத்தேசமாகத் தோன்றியது. பின் நிச்சயம் தான் என்ற எண்ணம் ஏற்பட்டுவிட்டது. உடனே திவானிடம் சென்று அதை விவரமாக வளைத்து வளைத்துச் சொல்லத் தொடங்கினாள். சொல்லச் சொல்ல அந்த விவரங்கள் அவள் வாயில் இன்னும் வலுப்பெற்றன. நிரூபணம் ஆகிவிட்ட சங்கதிபோல் அழுத்தந்திருத்தமாக ஆணித்தரமாக அடித்துச் சொன்னாள்.

கமலாபாயின் இந்தக் கண்டுபிடிப்பு திவானின் செவிக்குத் தேனாக இருந்தது. மகா நுணுக்கமான சோதிடக் கலையின் சக்தியை உறுதிப்படுத்துவதாகவும், அவர் ஜாதகத்தில் ஏற்பட்ட புதிருக்கு விடையாகவும், அவர் அந்தச் செய்தியை வரவேற்றார். உடனேயே அமாத்யாவை வரவழைத்து அவரிடமும் சொல்லி மைத்துனியின் சாமர்த்தியத்தைப் புகழ்ந்தார்.

அமாத்யா அப்படி ஒன்றும் எதையும் உடனே நம்பிவிடுகிறவர் அல்ல. ஆனால் கிளாவிருந்தாவின் மீது அவருக்கு எரிச்சல் மூண்டு கொண்டு இருந்தது. அவள் தன் சொத்துக்கு நாராயணன் வாரிசாகக்கூடாது என்று விடாப்பிடியாகச் சொல்லி வந்தது தான் காரணம். ஆகவே அவரும் அந்தக் கதையை வரவேற்றார். அப்பொழுது மலையாளத்து மாந்திரீகன் பத்மநாபன் பட்டேரி என்று ஒருவன் தஞ்சையில் தொழில் செய்து கொண்டு பிரபலமாக இருந்துவந்தான். இது விஷயமாக அவனைக் கலந்து அவன் ஆலோசனையின் பேரில் மேற்கொண்டு நடவடிக்கை எடுப்பது என்று முடிவு செய்தார்கள். கிளாவிருந்தாவுக்கு தங்கள் நடவடிக்கைகளைப்பற்றி எதுவும் தெரிந்துவிடக்கூடாது என்றும் தீர்மானம் செய்தார்கள். அவளையும் சாரதாவையும் கண்காணித்து வரும் பொறுப்பை கமலாபாய் மனமுவந்து ஏற்றுக்கொண்டாள்.

மறுநாள் பட்டேரிக்கு ஆள் அனுப்பி வரவழைத்தார்கள். கிளாவிருந்தாவுக்கு சந்தேகம் தோன்றாமல் இருப்பதற்காக அமாத்யாவின் வீட்டில் வைத்து ஆலோசனை நடைபெற்றது. அமாத்யாவும், அவர் மனைவி சோனாபாயும், கமலாபாயும் தான் இருந்தார்கள். கதவை உள்ளே தாளிட்டுக் கொண்டார்கள். பீடிகைகள் முடிந்ததும், பட்டேரி கறுப்பு மையை ஒரு இலையில் தடவி கமலாபாயின் உள்ளங்கையில் வைத்தான். அதையே ஒருமுகமாகக் கூர்ந்து பார்க்கச் சொன்னான். சிறிது நேரங்கழித்து அவன் கேள்விகள் கேட்கத் தொடங்கவே, அவள் பின்வரும் கதையைச் சொல்லலானாள்.

ஆகாசத்துக்கும் பூமிக்குமா ஆஞ்சநேயர் பிரம்மாண்டமாத் தெரியறார். பாக்கறத்துக்குப் பயங்கரமா இருக்கார். இப்ப போயிட்டார். ஒரு ஆத்தங்கரையும் பக்கத்துச் சரிவிலே சுடுகாடும் தெரியறது. ஈரத்துணியை இடுப்பிலே கட்டிண்டு ஒரு ஆள் தனியா நின்னுண்டிருக்கான். அவன் முன்னால் மணல்லே என்னமோ யந்திர கட்டம் வரைஞ்சிருக்கு. அது நடுவிலே மரத்தால் செஞ்ச ஒரு மனுஷ உருவம் இருக்கு. அவன் அடிக்கடி கிழக்கே பாத்துண்டே இருக்கான். ஆரோ பொம்மனாட்டி வரா. சாரதான்னா அது? அவங்கிட்டே என்னமோ சொல்றா. ஒரு தங்க மோதிரத்தையும் கொடுக்கறா. அது கிளாவிருந்தா போட்டுண்டிருந்த மோதிரம்னா! திருப்தியில்லாதவன் போல அவன் அவகிட்டே என்னமோ சொல்றான். உடனே சாரதா முந்திச் சேலையிலே முடிஞ்சிருந்த பணத்தை எடுத்துக் கொடுக்கறா. மூணுரூபா மாதிரி இருக்கு. அவன் அவளைப் போகச் சொல்றான். ..

**தொடரும் ..**



### சேலம் வரலாற்றுச் சங்கத்தின் முயற்சியால்

# காப்பாற்றப்பட்ட கிறிஸ்தவ மிஷனெரியின் கல்லறை



ஜே.பர்னபாஸ்
சேலம்

**திருமதி.தெரசியா யோங்கர் அம்மையார்(1789-1846)**

**'கல்லறைக்கு அவர்கள் கொண்டுவரப்படுவர்; அவர்களின் சமாதிக்குக் காவல் வைக்கப்படும்.'** - யோபு 21:32 (திருவிவிலியம்)

கணவனும் மனைவியுமாக கி.பி.1808 ஆம் ஆண்டு இங்கிலாந்து நாட்டிலிருந்து புறப்பட்டு வந்து, தென்னிந்தியாவிலுள்ள நாகப்பட்டிணத்தில் கிறிஸ்துவின் நற்செய்தியினை அறிவிக்கும் சுவிசேஷகனின் வேலையை, இருவருமாக இணைந்து அங்கே செய்து வந்தவர்கள் தான் திரு.ஜான் யோங்கர் ( Mr. John Younker), மற்றும் திருமதி.தெரசியா யோங்கர் அம்மையார் (Mrs.Therezia Younker) ஆகியோர். இவர்கள் கிறிஸ்தவ அறிவு பரப்புதல் சங்கம் (Society for the Probagation of Christian Knowledge - S.P.C.K.) என்ற கிறிஸ்தவ நற்செய்தியை அறிவிக்கும் மிஷனெரி சங்கத்தின் மூலமாக இந்தியா வந்தவர்கள். நாகப்பட்டிணத்தில் நற்செய்தி ஊழியத்தின் இடையே அந்த சீர்திருத்த திருச்சபையின் நிர்வாகத்தில் எழுத்தராகவும் திரு.ஜான் யோங்கர் பணி செய்துவந்தார். இப்படி முடிந்த வகையிலெல்லாம் நற்செய்திப் பணிகளிலும், திருச்சபையின் வேலைகளிலும், அர்ப்பணிப்புடன் செயலாற்றி வந்த திரு.ஜான் யோங்கர் 1840 ஆம் ஆண்டு தனது 55 ஆம் வயதில் இறைபதம் சேர்ந்தார்.

(Mr.John Younker was in the service of the S.P.C.K., and died at Nagapatnam, January 23rd,1840,aged 55years)

(1. The Old Anglican Cemetery Salem Tamil Nadu - Denise Love, BACSA,London,2014 page nos.16,17.) (2. List of Inscriptions on Tombs or Monuments in Madras - J.J.Cotton, Volume -2 ,Madras,1946.,page no.206)

தனது கணவரின் மரணத்திற்கு பிறகு சேலம் வந்து தனது மூத்த மகள் திருமதி.மரியா லியனோரா (Mrs. Maria Leonora) மற்றும் சேலத்தில் அரசு உயர் அதிகாரியாக இருந்த மருமகன் திரு.ஜான் வில்லியம் போல்த் ( Mr.John William Boalth ,M.C.S.) ஆகியோருடன் தங்கி இருந்த திருமதி. தெரசியா யோங்கர் அம்மையார் சேலத்திலும், அதன் மாவட்ட பகுதிகளான சுற்றுவட்டாரங்களிலும், குறிப்பாக தருமபுரி, அதியமான் கோட்டை ஆகிய இடங்களிலும் நற்செய்தி ஊழியங்களைச் செய்துவந்தார். அப்பொழுது சேலம் நகரிலிருந்து குடும்பத்தினருடன் பெங்களூரு பயணப்பட்ட திருமதி. தெரசியா யோங்கர் அம்மையார் செல்லும் வழியில் தருமபுரிக்கு முன்னதாக, அதியமான் கோட்டைப் பகுதியில் அமைந்திருக்கும் பயணியர் மாளிகையில் (Travellers Bungalow) தங்கியிருந்த போது 1846 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 8 ஆம் நாள் மரணமடைந்தார். எப்படி இறந்தார் என்பது தெரியவில்லை. ஒரு வேளை அந்த பகுதிகளில் பரவிய கொடிய காலரா கொள்ளை நோய் தாக்கி இறந்திருக்கலாம் அல்லது விஷத் தீண்டல், விபத்து என்று சொல்லலாம். அவரது உடல் பயணியர் மாளிகையிலிருந்து சிறிது தூரம் தள்ளி ஒரு மேடான பகுதியில் நல்லடக்கம் செய்யப்பட்டது. பின்னர் அந்த இடத்தில் அவரது குடும்பத்தினர் சாசன கல்வெட்டுடன் ஒரு அழகிய கல்லறையைக் கட்டி, அதற்கு சுற்றுச் சுவர் மற்றும் வாசல் கதவு வைத்து, திருமதி.தெரசியா யோங்கர் அம்மையாரின் நினைவைப் நிரந்தரப்படுத்தி வைத்தனர்.

**அரசாங்க வரலாற்று இதழ்களில் பதிவு பெற்ற கல்லறை**

தருமபுரி அதியமான் கோட்டை தெரசியா யோங்கர் நினைவுச் சின்னத்தை சேலம் மாவட்டத்தின் கலெக்டராக இருந்த




திரு.H. லீ பானு என்பவர் தனது "A Maual of the Salem District in the Presidency of Madras- Vol.1- The District -H.Lee Fanu, Madras,1883.,என்ற நூலில் பக்கம் 171ல் பதிவு செய்துள்ளார். அதே போல சேலம் மாவட்டத்தின் கலெக்டராக இருந்த திரு.J.J.காட்டன் என்பவரும் தனது 'List of Inscriptions on Tombs or Monuments in Madras - possessing historical or archaeological interest, - J.J. Cotton, Madras,1905.'என்ற நூலில் பக்கம் 288 ல் இந்த நினைவுச் சின்னத்தைப் பதிவு செய்துள்ளார். அதனைத் தொடர்ந்து சேலம் மாவட்டத்தில் கலெக்டராக இருந்த திரு.F.J.ரிச்சர்ட்ஸ் என்பவரும் தனது 'Gazetteer of the Salem District - Vol.1,Part -2 , by F.J.Richards,I.C.S.,Madras,1918., 'என்ற நூலில் 195,196 என்ற பக்கங்களில் பதிவிட்டுள்ளார். மேலும் இதுபோன்ற அநேக வரலாற்று மற்றும் பிரயாண குறிப்பேடுகளிலும் இந்த வரலாற்றுச் சின்னம் பதிவு பெற்றுள்ளது.

**வரலாற்றுத் தேடல் :**

மேற்கண்ட வரலாற்று நூல்களில் பதிவு பெற்ற



இந்த கல்லறையை பார்வையிடவும், வேறுபல வரலாற்று இடங்களைப் பார்வையிடவும் ஆவல் கொண்டு 30-1-2011ல் நாங்கள் மேற்கொண்ட முதலாவது தருமபுரி வரலாற்று ஆய்வுப் பயணத்தில் எங்களால் இந்த நினைவுச் சின்னத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. பின்னர் பத்திரிக்கை நிருபர் திரு.இராஜா என்பவர் இந்த கல்லறையைக் கண்டுபிடித்து விவரத்தை என்னிடம் தெரிவித்தார். அதன் அடிப்படையில் நாங்கள் 12-9-2011 ல் மேற்கொண்ட இரண்டாவது தருமபுரி வரலாற்று ஆய்வுப் பயணத்தின் போது, அப்பொழுது எங்களுடன் நியூசிலாந்து நாட்டிலிருந்து வந்து தனது முன்னோர்களின் கல்லறைகளை தரிசிக்க விரும்பி வந்திருந்த, திருமதி ஜீன் மெண்டிஸ் டீ ரோசாரியோ (Mrs.June Mendez de Rosario)அம்மையார் எங்களுடன் அந்த ஆய்வுப் பயணத்தில் இணைந்திருந்தார்.

**வீரகாரன் கோயில் வளாகத்தில் கிறிஸ்தவ மிஷனெரியின் கல்லறை :**

தருமபுரி அதியமான் கோட்டைப் பகுதியில் சாலை இரண்டாகப் பிரியும் இடத்தில் பாலக்கோடு போகும் சாலையில் வலதுபுறமாக முதலாவதாக உள்ள மசூதி வளாகத்தை அடுத்து உள்ள வீரகாரன் கோயில் வளாகத்திற்குள் கிறிஸ்தவ மிஷனெரி தெரசியா யோங்கர் கல்லறை அமைந்திருந்ததை பார்த்தபோது வியந்தோம். விரோதமான ஆக்கிரமிப்பாளர்கள் வளைத்துப் போட்ட வளாகத்தில் ஏற்கெனவே இருந்து இன்னும் நிலைத்திருக்கவே நிமிர்ந்திருந்த அந்த வரலாற்றுச் சின்னத்தைப் பார்த்து ஆய்வு செய்து ஒளிப்படங்கள் எடுத்துக் கொண்டு திரும்பினோம்.

**மூன்றாவது தருமபுரி வரலாற்று ஆய்வுப் பயணம்**

1-10-2014 அன்று சேலம் வரலாற்றுச் சங்கத்தினர் மேற்கொண்ட மூன்றாவது தருமபுரி வரலாற்று ஆய்வுப் பயணத்தின்போது, அதியமான் கோட்டை வீரகாரன் கோயில் வளாகத்தில் இருக்கும் தெரசியா யோங்கர் அம்மையார் நினைவுச் சின்னத்தை சென்று பார்த்தபோது: அந்தோ, அதன் கல்லறை சாசன கல்வெட்டு (Epitaph)அகற்றப்பட்டு அந்த இடம் ஒன்றும் தெரியாதது போல நேர்த்தியாக சிமெண்ட் கலவையால் பூசப்பட்டு பழையபடியே சிகப்பு வெள்ளை வர்ணங்கள் அடித்து இருந்ததைக் கண்டு அதிர்ச்சியும் வேதனையும் அடைந்தோம். கல்லறையைச் சுற்றி அமைக்கப்பட்டு இருந்த சுற்றுச் சுவர் சிறிய வாசல் அதற்கான இரும்புக் கதவு Iron Grill gate ஆகியவை ஏற்கெனவே அகற்றப்பட்டுவிட்ட நிலையில், வரலாற்றுச் சின்னம் தற்பொழுது அதன் அடையாளமான சாசன கல்வெட்டையும் அதன் 168 ஆவது ஆண்டில் இழந்து நின்றது பரிதாபம்.

**சாசன கல்வெட்டை மீட்க எடுத்த நடவடிக்கைகளும்,வெற்றியும் :**

வரலாற்றுச் சின்னம் தனது அடையாளமான சாசன கல்வெட்டை இழந்து நிற்கின்ற இந்த நிலையையும், இது குறித்த தகுந்த வரலாற்று ஆவணங்களின் ஆதாரங்களுடனும், ஒளிப்பட ஆதாரங்களுடனும்,அகற்றப்பட்ட சாசன கல்வெட்டை மீட்டு,அதனை அந்த வரலாற்றுச் சின்னத்தில் மீண்டும் பதிக்கச் செய்ய நடவடிக்கை எடுக்கக் கோரிய எங்கள் வேண்டுகோள் விண்ணப்பங்களை மாண்புமிகு தமிழக முதல்வர், தருமபுரி மாவட்ட ஆட்சித் தலைவர், தருமபுரி மாவட்ட வருவாய் அலுவலர், தருமபுரி மாவட்ட காவல்துறை கண்காணிப்பாளர் ஆகியோருக்கு கடந்த 27-10-2014 அன்று அனுப்பி வைத்தோம்.

தமிழக அரசும், தருமபுரி மாவட்ட நிர்வாகமும்,

தருமபுரி மாவட்ட காவல் துறையும் இணைந்து எடுத்த தீவிர நடவடிக்கைகளைத் தொடர்ந்து, அகற்றி ஒளித்து வைக்கப்பட்டிருந்த கல்லறை சாசன கல்வெட்டை வீரகாரன் கோயிலைச் சார்ந்தவர்கள் காவல்துறையினரிடம் ஒப்படைக்க, காவல் துறையினர் அவர்களைக் கொண்டே அந்த சாசன கல்வெட்டை தெரசியா யோங்கர் கல்லறையில் பதிக்கச் செய்து, எங்களுக்கு தகவல் கொடுத்து வழக்கை முடித்து வைக்கும்படி கேட்டுக் கொண்டனர்.

**நான்காவது தருமபுரி வரலாற்று ஆய்வுப் பயணம்:**

18-11-2014 அன்று சேலம் வரலாற்றுச் சங்கத்தினர் மேற்கொண்ட நான்காவது தருமபுரி வரலாற்று ஆய்வுப் பயணத்தின் போது அதியமான் கோட்டை காவல் நிலையத்தினரின் உதவியுடன் நாங்கள்சென்று வீரகாரன் கோயில் வளாகத்தில் உள்ள வரலாற்றுச் சின்னமான கிறிஸ்தவ மிஷனெரி திருமதி.தெரசியா யோங்கர் அம்மையாரின் கல்லறையை பார்வையிட்டு நினைவுச் சின்னத்தில் மீண்டும் பதிக்கப்பட்டிருந்த கல்லறை சாசன கல்வெட்டை சரிபார்த்து நிம்மதி பெருமூச்சுடன் பெருமகிழ்ச்சி அடைந்தோம்.

இந்த விஷயத்தில் தகுந்த நடவடிக்கைகள் எடுத்து சாசன கல்வெட்டை மீட்டு, அதனை மீண்டும் கல்லறை நினைவுச் சின்னத்தில் பதித்து வைக்க உதவிபுரிந்த தமிழக அரசிற்கும், தருமபுரி மாவட்ட ஆட்சியர் தலைமையிலான மாவட்ட நிர்வாகத்திற்கும், தருமபுரி வருவாய் துறையினருக்கும், தருமபுரி காவல் கண்காணிப்பாளருக்கும், காவல் துறையினருக்கும், அதியமான் கோட்டை காவல் ஆய்வாளர், செய்தி ஊடகத்துறையினருக்கும் நன்றி சொல்லி தருமபுரியில் செய்தியும் பேட்டியும் கொடுத்து சேலம் திரும்பினோம்.

100 ஆண்டுகளுக்கு மேல் பழமை பெற்ற எந்த ஒரு வரலாற்று நினைவுச் சின்னமும் 'வரலாற்றுச் சின்னங்கள் மற்றும் இடங்கள் பாதுகாப்புச் சட்டம் (திருத்தங்களும் மற்றும் தெளிவுபடுத்தலும்) 2010 ( The Ancient Monuments and Archaeological Sites and Remains Act (Amendments and Validations ) 2010. என்ற சட்டத்தின்படி பாதுகாப்பைப் பெற்றுள்ளது.

எப்படி நமது ஜெபங்களில் இறை இயேசு கற்ப்பித்த வாக்குத்தத்தங்களை மேற்கோள்காட்டி ஜெபித்துப் போராடுகிறோமோ அப்படியே அரசாங்கத்திடமும் நாம் சமர்ப்பிக்கும் வேண்டுகோள் விண்ணப்பங்களில் அரசாணை மற்றும் சட்டங்களை மேற்கோள் காட்டி விண்ணப்பிக்கும் போது வெற்றி நிச்சயம். கிறிஸ்தவ வரலாற்றின் சின்னங்களாகத் திகழும் ஐரோப்பிய மிஷனெரிமார்களின் கல்லறைகளை, மிஷன் கட்டிடங்களை, பழைய ஆலயங்களை பாதுகாப்போம்.



**Caroline Reginald**

**'வரலாற்றுச் சுவடுகள்' இரண்டு ஆண்டுகளை இனிதே தாண்டி, மூன்றாவது ஆண்டில் காலூன்றி இருப்பது மிக்க மகிழ்ச்சி. நெஞ்சார வாழ்த்துகிறேன். தூங்குகின்ற திருச்சபை மக்களைத் தட்டி எழுப்பும் திருமுயற்சி இது. வரலாற்று ஆர்வலர்களுக்கு வரப்பிரசாதம் இது. தூசி தட்டி எடுத்து வைக்கும் உன்னத வரலாற்றுச் சுவடுகள் ஒவ்வொன்றும் இனிமை இனிமை.**

**நினைவிலேயே நிற்க வேண்டிய நிஜங்களை புத்தக வடிவில் தருவதற்கு நன்றிகள் பல. இன்னும் பல்லாண்டு இவ்விறை பணி தொடர, உண்மை பல கோணங்களிலும அலசப்பட வாழ்த்தி விடை பெறுகின்றேன். நன்றி.**



**தமிழ் ராஜேந்திரன்**

வழக்கறிஞர் கரூர்

**கிறிஸ்தவ வரலாற்றுச்சுவடுகள் ஆய்விதழ் மிகுந்த சிறப்புக்குரியது அதில் வெளிவரும் கட்டுரைகள் யாவும் மிக அருமையான தொன்மையான அவசியமான செய்திகளை கொண்டுள்ளது. இந்த இதழ்கள் அனைத்தும் அதை வாசிப்பவர்களால் பத்திரமாக பாதுகாக்கப்பட வேண்டிய அரிய பொக்கிஷமாக உள்ளது கிடைத்தற்கு அரிய செய்திகள் இந்த இதழ்களில் வெளி வருகிறது. எனவே இந்த இதழ் தொடர்ந்து சிறப்பாக நடத்தப்பட எனது வாழ்த்துக்களை தெரிவித்து இந்த இதழை தயாரிப்பவர்கள் அதிலே எழுதுபவர்கள் அனைவரையும் கர்த்தர் முழுமையாக ஆசீர்வதிக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்கிறேன் நன்றி**



## டாக்டர். சாமுவேல் வசந்தரன் சீனிவாசகம்

பரலோகத்தில்
இணையில்லா மகிமையில் வீற்றிருக்கும் எங்கள் அன்பு
தகப்பனே !
பரம இராஜாவே !
இஸ்ரவேலின் பரிசுத்தரே !
சேனைகளின் தேவனாகிய கர்த்தாவே!
உம்மைத் துதிக்கிறோம் ...
ஸ்தோத்தரிக்கிறோம்.
இந்த 'கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்' என்னும் மாத இதழை ஆரம்பிக்க, தடையின்றி வெளிவர உமதன்பு அடியான் கனத்திற்குரிய சகோதரன் மன்னா செல்வகுமார், மற்றும் தம்பி சுஜித் அவர்களை கடந்த இரண்டு வருடங்களாக கண்மணிகளைப் போல நடத்தி வந்தீரே... காத்துவந்தீரே...
உமக்கு கோடாகோடி நன்றி !
இது உம்முடைய சுத்த கிருபையல்லவா ?
இஸ்ரவேல் ஜனங்களின் சரித்திரத்தையும், வரலாறுகளையும் தடையின்றி, இடைவெளியின்றி ... பல நூற்றாண்டுகளாய், தொடர்ந்து எழுத கட்டளையிட்டு, எழுத உதவிய தேவன், இவ்விரவருக்கும், அதைப்போலவே, எங்களது தமிழ்த் திருச்சபைகளின் வரலாற்றை எழுத, எழுதியவைகளை முறையாக ஆவணப்படுத்த கிருபை மற்றும் ஞானவரங்களைக் கொடுத்து வழிநடத்தியருளும்.
தொடர்ந்து பல வருடங்கள் இவ்வூழியம் தடையின்றித் தொடர, வளர்ந்தோங்க, தேவன் கிருபைச் செய்யும்.
உமக்கே எல்லா மகிமையும், கனத்தையும் செலுத்துகிறோம்...
எங்கள் அருள் நாதர் இயேசுவின் நாமத்தில் வேண்டுகிறோம்
ஆமென்.



## J.Reno Junia

Candidate for Ministry, Thanjavur

கர்த்தருடைய பரிசுத்த நாமத்தில் என் அன்பின் வணக்கங்கள். நான் கடந்த இரண்டு ஆண்டுகளாக 'கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்' மாத இதழை வாங்கி வாசித்து வருகிறேன். நான் எமது C.S.I திருச்சி தஞ்சை திருமண்டலத்தில் Candidate for Ministry ஆக பணியாற்றி வருகிறேன். இந்த இதழை வாசிக்க ஆரம்பித்ததிலிருந்து பல மிஷனரிகளுடைய வாழ்க்கை வரலாறுகள் அவர்களுடைய தியாக செயல்கள், திருச்சபை மற்றும் மிஷன் ஸ்தாபனங்களின் வரலாறை அறிய உதவி செய்தது. ஆலய ஆராதனை பிரசங்கத்திலே மேற்கோள் காட்ட இந்த இதழ் மிக உறுதுணையாக இருக்கிறது. குறிப்பாக இந்த உன்னதமான பணியை முன்னெடுத்து நடத்தும் மன்னா அண்ணனுக்கு சுஜித் அண்ணனுக்கும் என் பாராட்டுகளை தெரிவித்துக் கொள்கிறேன். ஆண்டவர் தாமே இந்த பணியை ஆசீர்வதித்து வர்த்திக்கப் பண்ணுவாராக.

## Rt.Rev.Dr.L.ஜோசப் மோகன் குமார்



பேராயர்- இந்திய ஆங்லிகன் பேராயம்-ACI
தமிழ்நாடு & பாண்டிச்சேரி பேராயம் CEEC.

இந்திய கிறித்தவ வரலாற்றுப் பாதைகளில், ஏன் உலக கிறித்தவ வரலாற்றுப் பாதைகளில் கிறித்தவத்தின் பங்களிப்பும், பதிவுகளும் ஆகாயத்தையும், ஆழியின் ஆழத்தையும் அடையாளப்படுத்துபவை! பல் சமய தாக்கமுள்ள இந்தியாவில் இந்து சமயமும், இஸ்லாமிய சமயமும் கோலோச்சிய காலகட்டங்களில், காலனியாதிக்கத்தின் காயங்களுக்கு களிம்பு பூசும் வண்ணமாக, கிறித்தவ இறையியலின் கீற்றுக்கள் விழுந்து எழுந்தது வரலாறு! கல்வி, மருத்துவம், நவீன தொழில் நுட்பம் போன்ற பல சமய மட்டுமல்ல, சமுதாய நன்மைகள் பல கிறித்தவம் நமக்குத்தந்த அருட்கொடை! அவர்களுக்கு மதம் மாற்றுவது மட்டுமே மையநோக்கம் எனில் இந்தியா இன்றும் பழங்குடி நாடாகவே படுத்துக்கிடந்திருக்கும்; மத பரவலுக்கு அது வசதியாகவும் இருந்திருக்கும்! கல்வி, மருத்துவம், கலாசச்சார மேம்பாடு, தீண்டாமை ஒழிப்பு, பெண் விடுதலை, அச்சுக்கலை, தமிழ் இலக்கணப்பணி, இவற்றில் இந்திய மிஷனரிகளின் பங்கு மேன்மையானது! குறிப்பாக தமிழகச் சூழலில் பணியாற்றிய கிறித்தவ மிஷனரிகளின் பதிவுகளை, பயணங்களை 'கிறித்தவ வரலாற்றுச் சுவடுகள்', ஆவணப்படுத்தி, அடுத்த தலைமுறைக்கு அதை கொண்டு செல்வது அருட்பெரும் செயல்! மனகாழ்ப்புணர்வுள்ள மதவாத சக்திகளால் சமீபகாலங்களில் கிறித்தவ மிஷனரிகளின் சமய, சமுதாய பணிகள் இருட்டடிப்பும், அழிகப்பட்டும் வருகின்றன! பேராயங்கள் செய்யத்தவறிய பெரும் ஊழியத்தை, கிறித்தவ வரலாற்றுச் சுவட்டின் மூலம், திரு. மன்னா செல்வகுமார் அவர்கள் மனபாரத்துடன் செய்து வருகிறார். எந்தவித பொருளாதார பின்புலமும் இல்லாது மூன்றாண்டுகள் முன்னேறி இருப்பது மூவருளாலே! கிறித்தவ வரலாற்றுச் சுவடுகள் இன்னும் பரவல்மயமாக்கப்பட வேண்டும்! அதற்கான பிறரின் பங்களிப்பு குறைவுள்ளதாகவே இருக்கிறது! வரலாற்றுச் சுவடுகளை வாங்குவதும், பொருளாதாரத்தினால் தாங்குவதுமே.... இந்த மூன்றாண்டு பயணத்திற்காக சிறு வாழ்த்தாக இருக்க முடியும்! வாழ்க கிறித்தவ வரலாற்றுச் சுவடுகள்!

## SCS . Christeeraj



கிறிஸ்துவின் நாமத்தில் அன்பையும், வாழ்த்துக்களையும் தெரிவித்துக்கொள்கிறேன். நமது முன்னோர்கள் இங்கு இந்தியாவில் அப்போஸ்தல பணியை எவ்வாறு நிறைவேற்றி இயேசுவின் இறையரசை ஸ்தாபித்தார்கள் என்பதையும், இன்று நாம் என்ன செய்துகொண்டு இருக்கிறோம்/நாம்(நான்) என்ன செய்ய வேண்டும் என்பதையும் விளக்கும் ஓர் அருமையான/ஆக்கப்பூர்வமான சுவடு..

## ஆ.ஏ.தா.சா.சார்லஸ் துரைசிங்



செக்கடிவிளை

‘திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரிய வேண்டும்,’ என்ற உயரிய கொள்கையை கையில் எடுத்து அதற்கேற்ப சில நூறு ஆண்டுகளுக்கு முன்னர் நம் மண்ணின் மைந்தர்கள் மற்றும் அயல் தேசத்து மிஷனரி மூலம் நடந்த இறைப்பணி வரலாற்றை நம் இன்றைய தலைமுறையினர் எளிதாக தெரிந்துகொள்ளும் வகையில் வரலாற்று சுவடுகள் என்ற அற்புதமான மாதாந்திர மடலாக நம் கையில் தவழுமாறு செய்யும் கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம் மற்றும் இதற்காக உழைத்த/ ஜெபித்த அனைவருக்கும் குறிப்பாக மன்னா செல்வகுமார் மற்றும் தம்பி சுஜித் ரெக்ஸ் அவர்களுக்கும் இறைவன் இயேசுவின் திருப்பெயரால் மனமார்ந்த நன்றியையும் தெரிவித்துக் கொண்டு, இங்கே உள்ள ஒவ்வொரு திருச்சபையின் ஆதி வரலாற்றை மாதம் ஒரு சபையாக வெளியிட வேண்டி வாழ்த்துகிறேன் நன்றி

## ஜே.பர்னபாஸ்,M.Sc.,

சேலம் வரலாற்றுச் சங்கம்,சேலம்



சேலம் வரலாற்றுச் சங்கம் சார்பில்
திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்
வெற்றிப் பவனியாக நடத்திவரும்
‘கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்’
மாத இதழின் மூன்றாம் ஆண்டுவிழாவிற்கு எங்கள்
வாழ்த்துக்களையும், பாராட்டுக்களையும்,
மிகுந்த மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.
கிறிஸ்தவ வரலாறுகளைப் பேசும் ஒரு இதழின்
தேவையை கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்
நிறைவேற்றி வருகிறதைக் காணும்போது
பேருவகை அடைகிறோம்.

## சகோ.காட்சன்.மே.ராஜ்குமார்

இயேசுவின் ஒளி ஊழியங்கள்.
பேர்ணாம்பட்டு. வேலூர் மாவட்டம்.



கி றிஸ்தவ வரலாற்றை
கி ரியத்துடன் பதிவிடும் தங்களின் இதழ் மிக நன்று
கி ணறு நீரைப்போல தங்களின் பதிவி என் நீண்ட கால பசி போக்கியது– பல
கி ருமிகள் தடுக்க நினைத்தாலும் தொடரும் உங்கள் பயணம்
கி ண்டலாக நினைத்த பலருக்கு நீங்களே பதிலாக மாறினீர்கள்
கி ழவன்/கிழவி என்று நினைத்த பலரின் பயன்மிக்க மிஷினரியின் வரலாற்றை எடுத்துக்காட்டுவதற்க்கு தேவன் தெரிந்துக் கொண்ட கருவிகள் நீங்கள்...பல சுவடுகளுக்கு நீங்களே கிளைகள்– எல்லா
கி ழமைகளில் நடந்த நிகழ்வுகளை தொகுக்கும் தங்களின் இறைபணிக்கு வாழ்த்த வார்த்தைகள் இல்லை
கி ளிப்போல பேசும் பதிப்பின் வரிகள்
கிராமத்தில் துவங்கிய வரலாறுகள்
கிறிஸ்தவைப் பற்றி கிறிஸ்துமஸ் செய்தி மிகவும் ஆசீர்வாதமே – நிச்சயம்
கி ருபை தொடரும்...
கர்த்தரின் ஆசீர்வாதம்கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் மாத ஆய்விதழ் மூன்றாம் ஆண்டிலிருத்து இன்னும் சிறப்பானதாக வளர்ச்சி அடையட்டும் ஆமென்.

## அன்புடன்,
## v. வீர சுவாமிதாஸ்,

இயக்குனர், வேதாகம நண்பன்.
ஆசிரியர்,
மனிதர்களை தேடிய மாமனிதர்கள்.



கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள் மாத இதழ் படிக்கின்றேன்.
மகிழ்ச்சியால் உள்ளம் பூரிக்கின்றேன்.

இந்த இதழானது, புதையுண்ட வரலாற்றையும், மிதியுண்ட வரலாற்றையும் அதன் தூசுதட்டி, மாசு துடைத்து, உண்மையை உரக்கச் சொல்லும் ஒரு வரலாற்று ஆய்வுக் கழகம்.
திசை தெரியாமல் இருப்போருக்கு திசைகாட்டி, திருச்சபை வரலாற்றை மேம்படுத்தும் இப்பணியில், ஒவ்வொருவரும் இணைந்து கட்டவும், எழுந்து கட்டவும், துணிந்து கட்டவும் வாழ்த்துகின்றேன்

## G-pay (Google Pay) மூலமாக சந்தா நன்கொடை அனுப்ப .....

‘வரலாற்றுச் சுவடுகள்’ – மாத ஆய்விதழுக்கென்று
G-pay(Google Pay) மூலமாக நன்கொடை அனுப்ப விரும்புகிறவர்கள்,
91767 80001 என்கிற இந்த எண் மூலமாகவும் அனுப்பலாம். நீங்கள் சந்தா நன்கொடை அனுப்பிய பின்பு,
அதைக் குறித்த முழு விபரங்களை இதே எண்ணில் தொடர்பு கொண்டோ,
அல்லது இதே எண்ணிற்கு WhatsApp மூலமாகவோ, அல்லது christianhistorical@gmail.com மூலமாகவோ
எங்களுக்குத் தெரியப்படுத்தவும்.

## சகோ. பவுல்

கல்வாரி ஊழியம்



வரலாற்று சுவடுகள் என்ற இந்த மாத இதழுக்காக உழைக்கும் அத்தனை பேருக்கும் நன்றியும், வாழ்த்துகளையும் தெரிவித்துக்கொள்கிறேன்.. இன்னல்களை கடந்து வெற்றிகரமாக மூன்றாம் ஆண்டினை துவங்க செய்ய கிருபை செய்திடும் தேவாதி தேவன் கர்த்தாதி கர்த்தருக்கு நன்றி கூறுகிறேன்.

வரலாறு என்பது நாம் கடந்து வந்த பாதைகள் தான். நம் முன்னோர்களின் சரித்திரத்தை நாம் அறிந்து வைத்திருக்க வேண்டியது மிக, மிக அவசியமே.. அந்த வகையில் இன்று நாம் வேதாகமத்தை வைத்திருப்பதும், நாம் கிறிஸ்தவர்கள் என்று சொல்லுவதும், ஆலய வழிபாடுகளும் இலகுவாய் நம்மை வந்தடையவில்லை பல எதிர்ப்புகள், பல தியாகங்கள், இரத்தம் சிந்துதலை கடந்தே வந்திருக்கிறது இவைகளை நாம் பார்க்கவில்லை என்றாலும் வரலாறு நமக்கு உண்மையை சான்றுகளோடு சமர்க்கிறது அந்த சான்றுகளை ஒவ்வொரு மாதமும் பல அறிய தகவல்களோடு இந்த வரலாற்று சுவடுகள் புத்தகம் வாயிலாக நாம் அறிந்துகொள்ள முடிகிறது..

பல மிஷினரிகள் தமிழ்நாட்டிற்கு வந்து ஊழியம் செய்து பல பாடுகள் மத்தியில் பல ஆத்துமாக்களுக்கு இயேசுவின் அன்பை போதித்திருக்கிறார்கள் அவர்களை உலகம் அறிந்திடவில்லை. அப்படிபட்டவர்களை இந்த உலகிற்கு அறிமுகம் செய்து வைக்கும் இந்த மாத இதழ் தலையாய பங்கு வகிக்கிறது என்பதில் எந்த சந்தேகமுமில்லை..

இந்த புத்தகத்தில் வெளியிடப்படும் ஒவ்வொரு செய்தியும், புகைப்படங்களும் பொக்கிஷங்கள் பாதுகாக்கப்பட வேண்டியவைகள். மிஷினரிகள் தங்கள் ஊழியங்களை திருநெல்வேலி, நாகர்கோவில் சுற்று வட்டார கிராமங்கலில் தங்கி தங்கள் இறைப்பனியை எப்படியெல்லாம் செய்து எப்படியெல்லாம் விசுவாசத்துடனும் இறைவேண்டலுடனும் பரத்திலிருந்து உதவியை பெற்றார்கள் என்பதை மிக அழகாக, எளிமையாக விளக்கும் வரலாற்று சுவடுகளின் ஆசிரியர்களுக்கு என் மனமார்ந்த நன்றியை தெரிவிக்க கடமைபட்டிருக்கிறேன்...

திருநெல்வேலி, தூத்துகுடி, நாகர்கோவில் சுற்றுவட்டார பகுதிகள் மட்டுமின்றி ஏனைய பகுதிகளில் வாழ்ந்த, மறைந்த இறைசாட்சியாளர்களையும் உலகிற்கு காண்பிக்க வேண்டும் என்பது என் விருப்பம்..

மீண்டும் ஒருமுறையாய் மூன்றாம் ஆண்டு காலடி பதிக்கும் வரலாற்று சுவடுகள் ஆசிரியர்களுக்கும், ஊழியர்களுக்கும் இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் வாழ்த்துகிறேன்.

## டேவிட் கருணாகரன்

கல்வாரி ஊழியம்



ஒவ்வொரு விசுவாசிக்கும் அனைத்து உண்மைகளையும் அறிந்துகொள்ள வேண்டிய உரிமையும் உண்டு கடமையும் உண்டு.
குரு ஒருவரே!
விசுவாசிகளில் ஏற்றத்தாழ்வு கடவுள் விரோதமே!
வரலாறு தோறும் திருச்சபைத் தலைவர்கள் மாபெரும் இக்கிறிஸ்தவ கொள்கையை புறக்கணித்தபோதெல்லாம் புரட்சி ஏற்பட்டது; சீர்திருத்தம் மலர்ந்தது!
இன்றும்
திருச்சபைகளில் ஆண்டான் அடிமை மனப்பான்மை தலைவிரித்து ஆடும் சூழலில்
வரலாற்றுச் சுவடுகள் ஆய்விதழ் திருச்சபையினின் பொறுப்பைத் தட்டி எழுப்பும் எழுச்சிக்குரலாக வெளிவருகிறது.
ஒவ்வோரு கிறிஸ்தவ குடும்பத்திலும் இருக்கவேண்டிய இதழ் வரலாற்றுச் சுவடுகள்!!!
தொடரட்டும் ஆய்வுகள்!
வலுப்பெறட்டும் சபையாரின் கடமையுணர்வு!

## ஏசுதாஸ் சாலொமோன்



இந்திய சரித்திரத்தை தமிழில் படிப்பதை காட்டிலும் ஆங்கிலத்தில் அதிகமாக படிக்கமுடியும், காரணம் தமிழை காட்டிலும் ஆங்கிலத்தில் இந்திய வரலாற்று புத்தகங்கள் அதிகம் என்று வரலாற்று ஆய்வாளர்கள் கருதுவார்கள்.
அப்படி இருக்கும்போது தமிழ் கிறிஸ்தவ வரலாற்றை மீட்டெடுப்பது, பாதுகாப்பது, மக்களுக்கு காட்டுவது என்பது மிக சிறந்த பணியாகும். இந்த உயரிய பணியை 'கிறிஸ்தவ வரலாற்றுமச் சுவடுகள்' ஆய்விதழ் செய்து வருவது, தமிழ் கிறிஸ்தவர்களுக்கு கொடுக்கப்பட்ட மிக பெரிய கொடை.
தொடர்ந்து செவ்வனே செய்தருள நன்றியுடன் வாழ்த்துகள்!

பல மிஷனரிகள் இயேசுவை அறிவிக்க எடுத்துள்ள பெரும் முயற்சிகள் வரலாற்று சுவடுகள் வழியாக அறிய முடிகிறது.
இன்றைய நவீன அறிவியல் உலகின் பல கண்டுபிடிப்பு, இல்லாத அந்த காலத்தில் நடந்தே சென்று... தங்க இடமின்றி... தொப்பிகளில் உணவை உண்டு.... சுவிசேஷம் அறிவிக்க உயிர் கொடுத்து அவர்கள் செய்த நற்செய்திப்பணி....
... இன்று மனக்கண் முன் நிறுத்துகிறது... வரலாற்று சுவடுகள்



## செல்வின் பால்ராஜ்



# அழிக்கப்பட்டதும் சுட்டெரிக்கப்பட்டதும்

குண. நைஜல்.

அழிக்கப்பட்டதும், சுட்டெரிக்கப்பட்டதுமான ஒரு தேசத்தை மறுபடியும் கட்டுவதற்கு அரசனிடம் அனுமதி வாங்கிட தேவ பக்தன் முறையிட்ட வார்த்தைகளில் ஒன்று என் பிதாக்களின் கல்லறைகள் இருக்கும் ஸ்தலமாகிய நகரம் (5. ராஜாவைப் பார்த்து: ராஜாவுக்குச் சித்தமாயிருந்து, அடியேனுக்கு உமது சமுகத்தில் தயை கிடைத்ததானால், என் பிதாக்களின் கல்லறைகளிலிருக்கும் பட்டணத்தைக் கட்டும்படி, யூதா தேசத்துக்கு நீர் என்னை அனுப்ப வேண்டிக்கொள்ளுகிறேன் என்றேன். நெகேமியா 2:5)

ஆகவே கல்லறை என்பது மனிதனின் வரலாற்று அடையாளங்களிலும் உரிமைகளிளிலும் ஒன்று.

வாக்குத்தத்தத்தின் தேசத்திலே உறுதிபடுத்தப்பட்ட நிலப்பரப்பு கல்லறை பூமியே. ஆதியாகமம் 23:16-20

(20. இப்படி ஏத்தின் புத்திரர் கையில் கொள்ளப்பட்ட அந்த நிலமும், அதிலுள்ள குகையும், ஆபிரகாமுக்குச் சொந்த கல்லறைப் பூமியாக உறுதிப்படுத்தப்பட்டது. ஆதியாகமம் 23:20)

கிறிஸ்து பிறந்த இடமானது பெத்லகேம் அது தீர்க்கதரிசனமாய் முன்குறிக்கப்பட்ட இடம்.

எப்படி என்றால் பெத்லகேமின் மறுபெயர் எப்பிராத்தா, ராமா மற்றும் ராகேல். (இது கல்லறையை சார்ந்த காரியமாகும்) ஆதியாகமம் 23:20

19. ராகேல் மரித்து, பெத்லகேம் என்னும் எப்பிராத்தா ஊருக்குப் போகிற வழியிலே அடக்கம்பண்ணப்பட்டாள்.

20. அவள் கல்லறையின்மேல் யாக்கோபு ஒரு தூணை நிறுத்தினான்; அதுவே இந்நாள்வரைக்கும் இருக்கிற ராகேலுடைய கல்லறையின் தூண். - ஆதியாகமம் 23:19, 20

16. பெத்லகேமிலும் அதின் சகல எல்லைகளிலுமிருந்த இரண்டு வயதுக்குட்பட்ட எல்லா ஆண்பிள்ளைகளையும் கொலைசெய்தான்.

17. புலம்பலும் அழுகையும் மிகுந்த துக்கங்கொண்டாடலுமாகிய கூக்குரல் ராமாவிலே கேட்கப்பட்டது; ராகேல் தன் பிள்ளைகளுக்காக அழுது, அவைகள் இல்லாதபடியால் ஆறுதலடையாதிருக்கிறாள் என்று,

18. எரேமியா தீர்க்கதரிசியினால் உரைக்கப்பட்டது அப்பொழுது நிறைவேறிற்று. மத்தேயு 2:16பி-18

கிறிஸ்து இயேசுவின் உயிர்த்தெழுதலும் கல்லறையும் லூக்கா 24:1-12

பேதுருவோ எழுந்திருந்து, கல்லறையினிடத்திற்கு ஓடி, அதற்குள்ளே குனிந்துபார்க்கையில், சீலைகளைத் தனிப்பட வைத்திருக்கக்கண்டு, சம்பவித்ததைக் குறித்துத் தன்னில் ஆச்சரியப்பட்டுக்கொண்டு போனான். லூக்கா 24:12

உயிர்த்தெழுதப்பின்பு கல்லறை எதற்கு என்று கர்த்தரின் தூதன் அதை உடைத்து போடாமல் வாசல் கல்லைமாத்திரம் புரட்டி வைத்தத்தற்கு காரணம், இயேசு கிறிஸ்து வாழ்ந்தார், மரித்தார் பின்பு உயிர்த்தார் என்பதை சீடர்களுக்கு, ஆசாரியர்களுக்கு, அதிகாரிகளுக்கு, அரசர்களுக்கு, உலகிற்கு சாட்சியாக காட்டுவதுற்கு.

அதுபோல நாமும் நம்முடைய மிஷனெரிமார்கள் இயேசுவுக்காக நம்மத்தியில் வாழ்ந்தார்கள், மரித்தார்கள் இனி உயிர்த்தெழுவார்கள் என்பதை அறிந்து அவர்கள் விட்டுச்சென்ற நினைவுகளை, நன்மைகளை, வரலாறுகளை (கல்லறைகளை), நம்மால் இயன்ற வரை பாதுகாப்பாயும் பத்திரமாயும் வைப்பது அவசியம் அல்லவா?

(சாட்சி பகர)

இதோ, சீக்கிரமாய் வருகிறேன்; அவனவனுடைய கிரியைகளின்படி அவனவனுக்கு நான் அளிக்கும் பலன் என்னோடேகூட வருகிறது.

இவைகளைச் சாட்சியாக அறிவிக்கிறவர்: மெய்யாகவே நான் சீக்கிரமாய் வருகிறேன் என்கிறார். ஆமென், கர்த்தராகிய இயேசுவே, வாரும். – வெளிப்படுத்தல் 22: 12, 20.

கர்த்தரின் நாமம் மகிமைப்படுவதாக - ஆமென்



# புரட்சிப்புயல் ஏமிகார்மைக்கேல்

அத்தியாயம்-01



Dr. ஜான்சிபால்ராஜ்
வன்னியன்குடியிருப்பு

கோவிலின் வெளிவாசலுக்கு வந்து, சுற்று முற்றும் பார்த்தாள்... இலட்சுமி. ஆங்காங்கே ஆண்களும் பெண்களும் அவரவர் வேலைகளைக் கவனித்தபடி நடமாடிக் கொண்டிருந்தனர். யாரும் தன்னைக் கவனித்ததாகத் தெரியவில்லை. நிம்மதி பெருமூச்சிவிட்டபடி ஓட தொடங்கினாள்.

அவளுக்கு ஒரு பத்து, பதினொரு வயது இருக்கும். முழுப்பாவாடையோடு சுற்றிக் கட்டிய சேலையும் கழுத்தில் மஞ்சள் கயிறும் நெற்றியில் குங்குமமும் வைத்திருந்தாள். கைகளில் வளையல்களும் தலையில் காலையில் வைத்த கதம்பமும் வாடி தொங்கி கொண்டிருந்தது. கண்களில் படபடப்பும் நடையில் வேகமும் இதயத்தில் நிரம்பியிருந்த பயத்தின் வேகத்தைக் காட்டியது.

மூச்சு வாங்கியபடி கொஞ்ச தூரம் ஓடியும் கொஞ்ச தூரம் வேக நடையுமாகத் திரும்பித் திரும்பி பார்த்தபடி சென்றுகொண்டிருந்தாள். அந்தக் கோவில் தெருவின் கடைசிவரை வந்த பிறகு ஒரு நொடி நின்று மீண்டும் ஒருமுறை திரும்பிப் பார்த்தாள்.அவள் விட்டு வந்த கோவில் வாசல் வெறுமையாய் இவளைப் பார்த்தது. மறுபடியும் ஒரு நிம்மதி பெருமூச்சை இறக்கி விட்டு மீண்டும் ஓடினாள். அந்த தெருவைத் தாண்டி அடுத்த தெருவிற்குச் செல்ல வலதுபுறம் திரும்பினாள்.

இனி ஓடக் கூடாது ,ஓடினால் கோயில் பெண் எங்கோ தப்பித்து ஓடுகிறாள் என்று அங்குள்ளவர்கள் புரிந்து கொள்வர். எனவே சற்றுத் தூரம் வேகமாக நடந்தாள். அந்தத் தெருவும் முடிந்தது. இனி யாரும் கவனிக்க வாய்ப்பில்லை. இது ஊரின் கொல்லைப்புறம். அதை தாண்டிவிட்டால் போதும் குளத்தங்கரை வந்து விடும். அந்தி, சாய்ந்து தன் இரவைத் தேடி இருளை வரவேற்றுக் கொண்டிருந்தது. ஓரளவு ஊர் அடங்கி கொண்டிருந்தது. இவள் அந்த ஊரை முழுமையாகக் கடக்க கொஞ்சம் இருட்டும் தேவைப்பட்டது. அதற்கு அந்த சூரியனும் உதவியது. அது தன் காந்தப் பார்வையோடு வேகமாக மேற்கு மலையிடுக்கில் இறங்கியபடி சிறிதளவு மிச்ச ஒளியை மட்டும் விட்டு விட்டு மறைந்து கொண்டது.இவள் அந்த இயற்கையின் உதவியோடு ஓட்டமெடுத்தாள்.

சற்று நேரத்தில் குளத்தாங்கரையைத் தாண்டி பண்ணைவிளை என்ற அந்த ஊரை அடைந்து விட்டாள். இவள் தோற்றமும் பதட்டமும் சோர்ந்து தொங்கிய முகமும் ஊர் முகப்பில், கிணற்றில் தண்ணீர் எடுத்துச் சென்று கொண்டிருந்த பெண் ஒருத்தியை சந்தேகிக்க செய்தது. அந்த இளம்பெண் நின்று திரும்பி இலட்சுமியைப் பார்த்தாள். இனி யாரும் கோவிலுக்குள் கொண்டு சென்று விட முடியாது என்ற தைரியம் லேசான ஆறுதலை அளித்தது அச்சிறுமிக்கு. தன்னை நின்று பார்த்த அந்தப் பெண்ணின் முகத்தை ஏறிட்டு பார்த்தாள்.

உதவி வேண்டும் என்று கெஞ்சியது அந்தப் பார்வை.

விளையாடிக் களைப்படையும் வயதில் வேதனையின் வடுக்கள் அந்தப் பிஞ்சு முகத்தில் குடியிருந்தது. அந்தப் பெண் இடதுபக்க இடுப்பில் ஒரு மண்குடம் வைத்திருந்தாள், தலையிலும் ஒரு வட்ட வடிவ மண் பானை,அதிலும் தண்ணீர். வலது கையைத் தலையிலிருந்து கீழே எடுத்தாள்.....பானை சூழ்நிலையைப் புரிந்து கொண்டு எள்ளளவும் அசையாமல் வாளையிலையில் முனைந்த சும்மாட்டில் அமர்ந்திருந்தது.

இங்க வா ...! என்று கையசைத்தாள்.

இலட்சுமி அன்னாந்து மேலிருந்த பானை முதல் பாதம் வரை ஒருமுறை அவளைப் பார்த்தாள்.பிறகு தரையைப்பார்த்தபடி குனிந்து நின்றாள். ஏதோ ஒரு வெறுமையும் சோகமும் அவள் முகத்தில் தாண்டவமாடியது. தண்ணீர் சுமந்து கொண்டு நின்ற பெண் சற்று முகத்தை சுழித்தபடி...

ஏய் இங்க வா..ஏன் இப்படி நிக்கிற? எங்க ஊர்காரி மாறி இல்லையே. எங்கிருந்து வாரா நீ?

ம்... ...வெடுக்கென்று தலையை உயர்த்தி அந்தப் பெண்ணைப் பார்த்தாள்.....அப்பாவியாய்! முகத்தில் பயமும் அதிர்ச்சியோடு சேர்ந்து கொண்டது. வேறு வார்த்தை ஏதும் வெளிவரவில்லை.

சரிசரி பயப்படாத.. வா எங்க வீட்டுக்கு. ராத்திரியாயிட்டு. பொட்ட புள்ளல்லா நீ. வா வா...ஒன்னமாறியே என் மகள் எங்க வீட்ல உம் இருக்கா.. . எதுன்னாலும் வெள்ளன பாத்துக்கலாம். வா

போவோம்.

முகத்தில் பயம் தெளிந்து லேசாக முகம் மலர்வது புரிந்தது. அருகில் வந்து வலக்கையால் அவள் பின்னந்தலையை வருடியபடி முன்னால் தள்ளி நடக்க உணர்த்தினாள். தயக்கத்தோடு சற்றுத் தள்ளியே நடந்தாள் இலட்சுமி. குடத்திலிருந்து நீர் அலம்பி அவள் தலையில் விழுந்தது. மேலே நிமிர்ந்து பார்த்தவளின் விழிகளில் குழப்பம் மிகுந்திருந்தது. இன்னும் சற்றுத் தள்ளி நடந்தாள்.

அன்னா பாரு தாயி,சோப்பு நிறத்தில ஒரு சேலை தொங்கிட்டு கெடக்கு பார்த்தியா.. அதுதான் எங்க வீடு.

இலட்சுமி ஒன்றும் சொல்லாமல் எட்டிப் பார்த்தாள். ஓலைவேயப்பட்ட மிகச்சிறிய குடிசை. வெள்ளையடிக்கப்படாத சாணத்தால் பூசப்பட்ட மண் சுவர்கள். வீட்டு வாசலில் வெளியில் திறந்தபடி வீட்டிற்குப் பொருத்தமில்லாத பெரிய கருப்பு நிறத்தில் கதவு. பனங்கம்புகளை அருத்து ஒன்றோடு ஒன்று இணைத்து கதவாக்கப்பட்டிருந்தது. கதவின் அடிப்பகுதி தரையோடு உரசிக்கொண்டிருந்தது. அதைப்போன்ற நான்கைந்து வீடுகள் அருகருகே இருந்தன. நேர்த் தெருவெல்லாம் அங்கு இல்லை. இந்த வீடு மற்ற வீடுகளிலிருந்து சற்று தொலைவில் கிழக்கு ஓரத்தில் இருந்தது.

கதவுக்கு மேல் கூரையில் காயப்போட்டிருந்த சிவப்பு நிற சேலை காற்றில் பறந்து பாதி கதவை மறைத்தபடி தொங்கிக் கொண்டிருந்தது.

இருவரும் வீட்டின் அருகில் வந்ததும் …

அம்மா…இவ்ளோ நேரமா ….ஏன் பிந்திட்டு? ஏழு அல்லது எட்டு வயது இருக்கும், துள்ளியபடி ஓடிவந்தாள் மகள். அதற்குள் அவள் இடுப்பிலிருந்த குடத்தை இறக்கி காலடியில் வைத்துவிட்டு. பிறகு தலையிலிருந்த பானையை இறக்கி அதை வீட்டிற்குள் கொண்டு போனாள். தலையிலிருந்த சும்மாடு சரிந்து உருண்டோடி இலட்சுமியின் காலருகே அமைதியானது.

அய்…அம்மா….இந்த அக்கா யாரு? முகம் முழுவதும் மலர்ச்சியோடு…கலகலவென்று சிரித்தபடியே ஒரு குதி குதித்து அவளருகில் சென்றவள் பிறகு ஏனோ பின்னெடுத்தாள் காலை. கையைப் பிடிக்க நினைத்து நீட்டினாள். ஆனால் இலட்சுமியிடம் எந்த சலனமும் இல்லை. அவளையே பார்த்தபடி ஏதோ சிந்தனையில் இருந்தாள்.

சரி உள்ள வாங்க ரெண்டுபேரும். ..

பானையும் குடமும் வீட்டிற்குள் தங்களுக்கான இடத்தில் அமர்ந்திருந்தன.

வாக்கா…. வீட்டுக்குள்ள..

சரி என்ற பாவனையில் மெல்ல அவள் பின்னால் நடந்தாள் இலட்சுமி. வாசலுக்கு வந்தவள் ஒரு கணம் நின்றாள்.

வா வா…உள்ள வாம்மா.

சத்தமாய் கூப்பிட்டபடி அவள் கையை பிடித்தாள். உள்ளே சென்றவள். ..வீட்டைச் சுற்றி பார்வையை மெல்ல ஓட விட்டாள். இது வீடா அல்லது கோழிக்கூடா? தனக்குள் கேட்டாள். ஆனாலும் ஏதோ ஒரு அமைதியும் மகிழ்ச்சியும் அந்தக் குடிசைக்குள் குடியிருப்பதை உணர்ந்தாள்.

உக்காரு…. சிரிப்பை ஏந்திய உதட்டில் விழிகளில் மகிழ்ச்சி ததும்ப கூறினாள், உட்கார்ந்தார்கள்.

எதுவும் பேசவே இல்லை.

அம்மா அடுப்பை எரியவைத்துக் கொண்டிருந்தாள். அந்தக் குடிசையின் ஒரு ஓரத்தில் அடுப்பங்கரை, அதைச் சுற்றி ஒன்றிரண்டு பாத்திரங்கள் தட்டு, டம்ளர், கரண்டி என்று வைக்கப்பட்டுருந்தது.

சோறு வேவவே இல்ல… அடுப்பு அணைஞ்சி கெடக்கு..நீ என்ன செஞ்சிட்டு இருந்தா? கருப்பு நிறத்தில் சப்பல்களோடு கிடந்த ஊதுகுழலை எடுத்து ஊதி தீயை எரிய வைத்தாள் அம்மா. கண்ணுக்குள் புகை முட்டியது…. இருமியபடியே நான் வரும் வரை ஒருவேலையும் செய்யல நீ…. கோபித்தாள்.

யம்மா…. அது வெறவா …எல்லாம் பச்சக் கம்பு… நான் ஊதி ஊதிதான் பாத்தேன்… எரியவே மாட்டேன்ட்டு… அதான் அப்படியே போட்டுட்டேன்.

வீடு முழுதும் புகையாகி இலட்சுமி தன் கையால் புகையை வீசி விரட்டிக் கொண்டிருந்தாள். அம்மா அவள் பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள்.

இங்க பாரும்மா…லெச்சுமி. இது எம் பொண்ணு செல்வி. நீயும் எம் பொண்ணு மாதிரிதான். எம்பேரு தங்கம்மா. ஒன்றுக்கும் நீ கவலைப்படாத. உனக்கு நான் இருக்கேன். சொல்லு …. நீ கோயில் பொண்ணுன்னு மட்டும் தான் தெரியுது. வேற ஒன்றும் தெரியல.

சொல்லு …எதுக்கு இந்த ஊருக்கு அதுவும் இந்த நேரத்தில் வந்தா? ..

எந்த பதிலுமே இல்லை இலட்சுமியிடம். முகத்தை வேறுபக்கம் திருப்பி எதையோ உற்றுப் பார்த்தது போல் இருந்தது அவள் பார்வை. ஆனால்

வெறுந்தரையில் எதையும் அவள் பார்க்க வாய்ப்பில்லை. அமர்ந்தபடியே இன்னும் நகர்ந்து அவள் அருகில் சென்ற அம்மா, இங்க பாருமா என்று அவள் தாடையை மெல்லத் திருப்பினாள்.

சில நொடிகள் அவள் கண்களையே பார்த்த இலட்சுமி… லேசாக வாய் திறந்து, எனக்கு மிசியம்மாவைப் பார்க்கோணும் என்றவள் கண்கள் குளமாகி உதடுகள் பொறுமின…மூச்சுக் காற்று அவள் கூரியமூக்கை சற்றே விரித்தபடி வெளியேறியது.

யாரு…மிசியம்மாவா…. அந்த வெள்ளக்கார அம்மாவையா சொல்லுதா கண்ணு?

ஆமா… மிசியம்மாட்ட கூட்டிப்போகணும்…. விம்மல் அழுகையாகி சத்தம் பெரிதானது.

சரிசரி…. அழாத…நான் விடிஞ்சதும் ஒன்ன அவங்ககிட்ட கூட்டிட்டுப் போறேன். சரியா?

அழாத அழாத…. என்றவள் அவள் கண்ணீரை இரண்டு கையாலும் துடைத்து முகத்தை தன்மார்போடு அனைத்துக் கொண்டாள்.

அழுகை தாயின் அணைப்பில் குறைந்தது. செல்வியும் தன் கண்களைத் துடைத்தாள். அழுகையும் சிரிப்பும் அருகில் இருப்போரையும் தொற்றிக் கொள்ளும் தானே?

கள்ளம் கபடமில்லா குழந்தைகளை உணர்வுகள் ஒன்றிணைத்தன. செல்வியையும் இன்னொரு கையால் இழுத்து தன் மடியில் சாய்த்துக் கொண்டாள் அந்த இளந்தாய்.

சடாரென்று இலட்சுமி அம்மாவின் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு நிமிர்ந்தவள், படுக்கணும் என்றவள் படுக்கையை வீடு முழுவதும் பார்வையால் தேடினாள்.

இரும்மா….சோறு தின்னுட்டு பெறவு படுப்போம்.சரியா.?

இப்ப கைகால் கழுவிக்கிடுதியா?

செல்வி இவளை பெறத்த கூட்டிட்டுப் போ கைகால் அலம்பிட்டு வாங்க. அப்ப தான் ஒறக்கம் வரும். எந்திரிங்க.... வெளியே நல்ல நிலவெளிச்சம் இருக்கு..

செல்வி எழுந்து விட்டாள். நொடி நேரத்தில் காரணம் புரியாமல் வந்த கண்ணீர் மறைந்து புன்னகை மலர்ந்திருந்தது செல்வியின் முகத்தில்...

இலட்சுமி மெதுவாக எழுந்து நடந்தாள்.....

சில நிமிடங்களில் திரும்பி வந்து அதே இடத்தில் அமர்ந்தனர்.

செல்விக்கு எப்படியாவது அந்த புது அக்கா தன்னோடு இயல்பாக பேசிவிட மாட்டாளா என்ற ஏக்கம். அவளது ஒவ்வொரு அசைவையும் கவனித்தாள். நம்ம ஊர் பிள்ளைகளைப் போல இல்லை. இவள் தோற்றமும் நடவடிக்கைகளும்.. வித்தியாசமானதாக இருந்தது செல்விக்கு. நாளையாவது பேசுவாளா? என் கூட்டாளிகளிடம் இவளை கூட்டிட்டு போகணும். சேர்ந்து பல்லாங்குழி வெளையாடணும்....! மனதிற்குள் ஆசைகளைப் பட்டியலிட்டபடி இலட்சுமியின் முகத்தையே வரிவரியாய் வாசிப்பவரைபோல் பார்த்தாள். ஆனால் எதையும் புரிந்து கொள்ள இயலாமல் அமைதி காத்தாள்.

அம்மா இரண்டு அலுமினிய தட்டுகளில் சோறு போட்டு கொண்டு வந்தாள். ஒன்றை செல்விக்கு முன்னால் வைத்து விட்டு மற்றொன்றை இலட்சுமிக்கு நேராக நீட்டினாள். இந்தாம்மா....சாப்பிடு..

இல்லன்னா நான் அள்ளித் தரட்டா என்றவள் சோற்றை பிசைந்தாள்.

வேண்டாம். எனக்கு சாப்பிட பிடிக்கல. நான் மிசியம்மாவ பாக்கணும்.... வார்த்தைகளில் அழுகையின் சோகம் தாக்கியது.

சரி சரி...விடியட்டும். பக்கத்தில் தான் அவுங்க இருக்காங்க. கண்டிப்பா ஒன்ன கூட்டிட்டு போறேன். இப்ப இத சாப்பிடு. கருவாட்டு கறி. ருசியா இருக்கும். இல்லயா செல்வி?

ஆமா....எங்கம்மா கருவாட்டு கொழம்பு நல்லா வைப்பாக்கா...சாப்பிடு...!

உவ் ..வெ.... வாயை கையால் பொத்தினாள் இலட்சுமி.

ஏதோ ஒரு வாடையடிப்பதாக எண்ணிக் கொண்டிருந்தவள் கருவாட்டு வாடை என்றதும் வயிற்றைப் பிறட்டி வாந்தி எடுக்கும் உணர்வில் இருந்தாள்.

ம்ஹூம்... நான் சாப்பிட மாட்டேன்....என்றவள் மீண்டும் குமட்டலோடு எழும்பி விட்டாள்.

ஓ....நீங்க எறச்சி திங்க மாட்டீங்களா....என்றவள்... புரிந்து கொண்டாள்.

சரி...இந்த வெறுஞ்சோத்தில உப்புபோட்டு சோறு வடிச்ச தண்ணிய ஊத்தி தரட்டாமா....? தாய்மைப் பொங்க கேட்டாள்.

இலட்சுமிக்கு அந்த பரிவான வார்த்தைகள் தன் தாயின் அன்பை நினைப்பூட்டவே கண்கள் கலங்கியபடி...ம்ஹூம் வேண்டாம்...எனக்கு என்றாள் மென்மையாக.

சரிமா.....படுத்துக்கோ. நாளை வெள்ளனையே நாம மிசியம்மாவ பாக்க போவோம்.

எதில் படுப்பது... லட்சுமியின் விழிகள் வீடு முழுவதும் மௌனத்தோடு தேடியதை பார்த்தாள் அம்மா.

செல்வி.. பாய் போடு அக்கா படுக்கட்டும்.

இருந்த இடத்தலேயே கைகளை கீழே ஊன்றி நான்கு கால்களில் வேகமாக சுவர் ஓரம் சுருண்டு கிடந்த பாயை இழுத்து வந்து போட்டாள். ஓலைப் பாய்.

நகர்ந்துபோய் படுக்க போனவளை, இரு... இரு தலவாணி கொண்டு வாரேன். எழுந்து போனவள் செவ்வக வடிவில் வீட்டு மூலையில் எந்த நிறமும் இன்றி துருப்பிடித்து பிறகு சுத்தமாக்கப்பட்ட பெட்டியின் மேல் இருந்த துணி மூட்டையை அள்ளி வந்து நீட்டினாள். இந்தா சுருட்டி தலைக்கு வச்சிக்க... என்றாள் சிரிப்பு மாறாமல்.

அவளின் கள்ளமில்லா அன்பை அமைதியாய் பருகியவள். அந்த துணிகளை வேண்டாம் என்று தலையாட்டி விட்டு தன் கையையே தலைக்கு வைத்து சுருண்டு படுத்துக் கொண்டாள்.

தாயும் மகளும் அவளையே பார்த்தபடி அமர்ந்திருந்தனர். பிறகு, செல்வி நீ சாப்பிடுதியாமா?

ம்... சரி.

அக்கா ஏம்மா சாப்பிட மாட்டேங்குது.?

தெரியலமா. நாளைக்கு கேப்போம். இப்ப ஒறங்கி முழிக்கட்டும். சத்தமா பேசாத.அவள் அசதியா இருக்கா.

சரிமா.

சரி நாம செத்த நேரம் வெளியில் இருப்போம். லெச்சுமி அசந்து ஒறங்குது.

வீட்டிற்குள் எரிந்த விளக்கு வெளிச்சத்தைவிட வானத்தில் நிலவு தன் முக்கால் முகத்தை வெளிக்காட்டி மின்னி கொண்டிருந்தது. வெளிமுற்றத்தில் கதவிற்கு மேல்பக்கம் போடபட்டிருந்த ஆட்டுரலின் மேல் உட்கார்ந்தாள் அம்மா. தரையிலிருந்து ஒரடி உயரத்தில் உயரத்தில் பதிக்கப்பட்டிருந்த அந்தக் கல் தான் இரவு நேரம் அவர்களை இளைப்பாற்ற காத்துகிடக்கும் அவர்களது உயர்ந்த இருக்கை.

அன்றாடம் இரவில் செல்வியின் அப்பா மாணிக்கம் ஒரு பக்கமும் அவர்மீது சாய்ந்தபடி அம்மாவும் மகளுமாக இருந்து கதையளப்பர். அதுவும் செல்வி நிலா வெளிச்ச காலத்தில் அவள் வீட்டருகில் உள்ள குழந்தைகளோடு விளையாட சென்று விடுவாள். அங்கிருந்த வீடுகளுக்கு நீளமும் அகலமுமான நீள் வட்டவடிவ முற்றம் தான் குழந்தைகளுக்கான விளையாட்டுக் களம்.

விளையாட்டொலியும் சிறுவர்களின் சிரிப்பொலியும், பெரியவர்களின் பேச்சொலியும் இரவின் நிசப்தத்தை விரட்டி இதமாக்கும்....பெரும்பாலும் அது அம்மாவும் அப்பாவும் தங்கள் பரஸ்பரம் அன்பை வளர்க்கும் நேரமாகவே இருக்கும்.

இன்று அம்மா அதில் அமர்ந்திருக்க... செல்வி..

அம்மா... அங்க பாரு நெலவு முழுசாக இன்னும் மூணு நாள் தான் இருக்கு. அப்பா வந்திடுவேன்னு சொன்னாங்கல்ல. நிலவையே பார்த்து சிரித்தபடி குதித்தாள்.

ம்.... என்றபடி வானத்தை அன்னாந்து பார்த்து ஆனந்தத்தில் உதட்டில் வெளிவந்த வெட்கப் புன்னகையை விழுங்கி கொண்டாள் தங்கம்மாள்.

கிணறு வெட்ட ஒருநாள் நடைப்பயணத்தில் உள்ள நாங்குநேரிக்கு அருகில் ஏர்வாடி என்ற ஊரில் தங்கியிருந்து இருபது நாளுக்கு ஒருமுறை இரண்டுநாள் விடுமுறையில் வருவதாய் சொல்லிப் போனான். சென்ற தேய்பிறையில் இதே இடத்தில் நிலவை பார்க்க மனமற்று ஒருவரை ஒருவர் பார்த்து சிரித்து சிரித்து பேசி கழித்த நாட்கள் நெஞ்சோடு நிழலாட அந்த நிலவையே வெறித்துப் பார்த்துப் கொண்டிருந்தாள் தங்கம்மாள். நிலவே விரைந்து நீ முழு

முகம் காட்டேன்.... ! கெஞ்சினாள்... மனத்திற்குள்..!

விளையாடிக் கொண்டிருந்தவள் அம்மா....என்று ஓடி வந்தாள் முதுகில் சாய்ந்தபடி கழுத்தைக்கட்டிக் கொண்டாள்...செல்வி. அம்மா....நீ அந்த அக்காவ கோயில் பொண்ணுண்ணு சொன்னியே. அப்படின்னா என்னம்மா,?

அது ....உனக்கு சொன்னா புரியாது. பெறவு சொல்றேன் போ.

அதெல்லாம் புரியும்...நீ சொல்லு இப்பவே.

செல்வி... இந்த மாதிரி நிறைய பொண்ணுங்க கோயில்ல இருப்பாங்க. கோயில்ல பாட்டுப்படிக்க... நாட்டியமாட, வேலைகள் செய்யன்னு இருப்பாங்க. சின்ன குழந்தையிலேயே கோயிலுக்குன்னு நேர்ந்து விட்டுருவாங்க. பிறகு பொட்டு கட்டுதல்ன்னு ஒரு சடங்கு வச்சி. கோயில்ல கொண்டு போய் விட்டுருவாங்க. அதுக்கு பெறவு அந்த புள்ளைங்க வீட்டுக்கு போவவே கூடாது. அந்த கோயில்ல உள்ள சாமி தான் அந்த பொண்ணுங்களுக்கு புருஷன்.

என்னது...!!.ஆச்சரியத்தில் வாய்ப் பிழந்தாள் செல்வி.

ஆமா.... மொதல்ல கோயில் பொண்ணுங்க சாமிக்கு பொண்டாட்டியா நல்லாதான் பயபக்தியா தான் இருந்திருக்காங்க. பெறவு வந்த காலத்துல இந்த பொட்டப் புள்ளைங்கள சில அயோக்கியன்கள் தப்பா பயன்படுத்தி கிட்டானுங்க....இப்பவும் நிறைய கோயில்கள்ள தப்பாதான் நடத்துறான்களாம்.

அது என்ன தப்புமா... ? அப்பாவியாக கேட்டாள்.

அது..... அது... எப்படின்னா... உனக்கு புரியாதுமா.... ஆம்பளைங்க இந்தப்பொண்ணுங்கள ஆசைக்கு பயன்படுத்திட்டு அதுக்கும் சனங்க நம்புற மாதிரி பொய் கதைகளைக் கட்டி அவுத்து விட்ருவானுக.

கதையா.... அது என்ன கதை....சொல்லு சொல்லு... அப்பா போன பிறகு நீ சீக்கிரம் ஒறங்கிடுவ. எனக்கு கதை சொல்லி எவ்ளோ நாளாச்சி....சொல்லு....அது என்ன கதை..

அய்யோ.... யோசித்தாள். இவளுக்கு எப்படி புரிய வைக்க.. முணு முணுத்தாள்.

இந்த கோயில் பொண்ணுங்க இருக்கிற கோயில்கள்ல உள்ள பெரிய ஆட்கள்ளாம் நாங்க தான் சாமியின் அருள் பெற்றவங்க. சாமியோட ஆவி எங்க மேல இருக்கு. அப்போ நாங்க தான அந்த சாமி. ?? அதனால இந்த சாமிக்கு பொண்டாட்டியா நேர்ந்து விட்டு வந்த இந்த புள்ளைங்களுக்கு நாங்க தான புருசன்கள்னு கேட்பானுக. நாங்க அந்த பொண்ணுங்களோடு கலந்தா சாமியே கலந்த மாதிரின்னு கதைகதையா ஊருக்குள்ள ஊதி விடுவானுங்க. சனங்களும் அதுவும் நியாயம்தானன்னு தலையாட்டுவாங்க. இப்படி தான் காலாகாலமா நடக்குது. பாவம் இந்தப் பிஞ்சி குழந்தைங்க... வேதனையில் பெருமூச்சு விட்டாள் தங்கம்மா.

அதனால் என்னம்மா. சாமி நல்லவருதான. பிறகு என்னத்துக்கு இந்த பிள்ளைங்க பாவம்ங்கிற.... கோயில்ல இருந்தா நல்லது தான.? அவுங்க அம்மாவ பாக்க முடியாதுல்ல அதுக்கா சொல்ற... ? புரியாமல் விழித்தாள்.

ஆமா....ஆமா..... சரி அதை விடு.

வா உறங்க போவோம். அந்தப்பொண்ணு ஒறங்கியிருக்கும்.

இருவரும் எழும்பி எப்போதும் திறந்த நிலையிலேயே இருக்கும் கதவை இருவரும் சேர்ந்து இழுத்து வாசலை அடைத்தனர். தாழ்ப்பாள் எதுவும் கிடையாது. நிலையில் இருந்த ஒரு துவாரத்தில் கதவில் தொங்கிய ஒரு வளைந்த கம்பியை இழுத்து கொழுவி வைத்தாள். அதில் தான் அந்த வீட்டின் பாதுகாப்பு இருப்பதை போல மீண்டும் ஒருமுறை இழுத்துப் பார்த்து உறுதிப்படுத்திக் கொண்டு மூலையில் சுருட்டி வைக்கப்பட்டிருந்த இன்னொரு பாயை எடுத்து போட்டு இருவரும் படுத்துக் கொண்டனர்.

இலட்சுமியின் படுக்கைக்கும் இவர்கள் படுக்கைக்குமிடையே இரண்டடி இடைவெளி. அம்மா இலட்சுமிக்கு முதுகு காட்டியபடி சரிந்துபடுத்திருந்தாள். செல்வி தாயின் கழுத்தைக் கட்டிக் கொண்டு ஒரு காலை அம்மா மேல் போட்டிருந்தாள்.

வெளியில் நடந்த உரையாடல்களை ஒன்று விடாமல் கேட்டுக்கொண்டு படுத்திருந்த இலட்சுமிக்கு தூக்கம் வரவில்லை. எப்படி வரும்.? பயம்...நாளை என்ன நடக்கும் என்று தெரியாத நிலை. இரவிலேயே தன்னைத் தேடிக் கொண்டு அந்தப் கோவிலில் இருந்து பெண்கள் வந்து விட்டால் என்ன செய்வது...? அவள் இதயம் அவ்வப்போது வேகமெடுத்து அடித்து அமர்ந்தது. இதற்கிடையில் பசி.



தாயும் மகளும் அணைத்தபடி படுத்திருந்த காட்சி தன் தாயை கண்ணருகே கொண்டு வந்து நிறுத்தியது.... அவளுக்குத் தன் தாயின் ஏக்கம் மேலும் கூடியது. இதயம் கனத்து கண்ணீர் கட்டுப்படுத்த முடியாமல்.

பாயில் விழுந்தது.....

அம்மா.... என்று நிசப்தமாக அழைத்துக் கொண்டாள்.... பதிலுக்கு மேலும் கண்ணீர்குளம் உடைந்து சாடியது...! என் அம்மா எப்படி என்னைப் பிரிந்து இருக்கிறாள்...? என்னை நினைக்காமல் இருப்பாளா?..இல்லையில்லை நிச்சயம் நினைப்பாள். தினமும் தூங்கும் போது என் உள்ளங்கையை அவள் முகத்தோடு சேர்த்து பிடித்திருப்பாள்... நினைக்க நினைக்க நெஞ்சு முட்டியது துக்கம். அழுதுவிட கூடாதென்று....அடக்கி கொண்டாள்.

அம்மாவின் காலிலிருந்து செல்வியின் கால் தானாக வழுவி கீழே நீண்டது. அவள் தூங்கி விட்டதை உறுதி செய்து அம்மா மல்லாந்து படுத்து தூங்க தயாரானாள்.

இலட்சுமி கண்களை மூடிக் கொண்டாள். தன்னை எதேச்சையாகத் திரும்பி பார்க்க வாய்ப்பிருக்கிறது என்ற எண்ணம் அவளுக்கு.அந்த இரவு அவளுக்கு மிக நீண்ட இரவு... விடியும் புதியநாள் விடியலை ஏற்படுத்துமா...!?

தொடரும் ...

J.ஜான் ஞானராஜ்

கல்லிடைக்குறிச்சி



பூர்வ நாட்களை நினை தலைமுறை தலைமுறையாய் சென்ற வருடங்களை கவனித்துப் பார் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் பேரருளால் வெற்றிகரமாக நான்காம் ஆண்டுக்குள் நுழையும் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்துக்கும் மூன்றாம் ஆண்டுக்குள் நுழையும் அதன் மாதாந்திர ஆய்வு இதழான கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் மாத இதழுக்கும் அன்பு கலந்த நல்வாழ்த்துக்களை மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

வரலாற்றை மறந்தவன் அழிவை நோக்கி செல்கிறான்.

வரலாற்றை அறிந்தவன் உயர்வை நோக்கி செல்கிறான்.

திருநெல்வேலி சார்ந்த தென்தமிழக வரலாறு மட்டுமல்லாது ஒன்றுபட்ட தமிழ்நாட்டின் அனைத்து பகுதிகளைச் சார்ந்த வரலாற்று தடங்களையும் முழுமையாக ஆய்வு செய்து, பாதுகாத்து அவற்றை வருங்கால தலைமுறையார் நினைவுகூற சீரிய பணிகள் இச்சங்கத்தின் மூலமும் இச்சங்கத்தின் மூலம் வெளியிடப்படுகிற கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் எனும் மாதாந்திர ஆய்விதழ் மூலமும் செய்யப்படுகின்றன என்தைக் கண்ணாரக்கண்டு ஆண்டவரைத் துதிக்கிறேன் ஆண்டவருக்கு நன்றி செலுத்துகிறேன்.

வரலாற்றுப் பணிகளை மிகச் சிறப்பாக ஒருங்கிணைத்து செய்கிற இச்சங்கத்தின் நிறுவனர் மற்றும் மாதாந்திர ஆய்விதழின் பதிப்பாசிரியர் திரு. மன்னா செல்வகுமார் அவர்களை அன்போடு பாராட்டுகிறேன் .வாழ்த்துகிறேன். மேன்மேலும் பணிகளை சிறப்பாக செய்ய இறைவேண்டல் செய்கிறேன்.

நீண்டகாலமாக மறுபதிப்பு செய்யப்படாமல் இருந்த வரலாற்றுப் பொக்கிஷமான நூல்கள் கடந்த இரு ஆண்டுகளில் மறுபதிப்பு செய்யப்பட்டுள்ளது.

மிஷனரிகளின் வாழ்க்கை வரலாறு மிகச் சிறப்பாக எளிய முறையில் விளக்கப்பட்டுள்ளது.

வரலாற்றுச் சம்பவங்கள் பல்வேறு கோணங்களில் பல்வேறு பார்வைகளில் கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் மாத இதழ் மூலம் மிக அருமையாக விளக்கமாக, தெளிவாக, துல்லியமாக விளக்கப்பட்டுள்ளது.

வெளிநாட்டு, உள்நாட்டு மிஷனரிகளின் நினைவிடங்கள் கல்லறைகள் பாதுகாக்கப்பட முயற்சிகள் முன்னெடுக்கப்பட்டுள்ளது. தொடக்ககால கிறிஸ்தவ கீர்த்தனைகள் மற்றும் பழங்கால கைப்பிரதிப் பாடல்கள் ஆகியவற்றின் பாடலாசிரியர்கள் அவர்களது இலக்கிய பங்களிப்பு அவர்களது வாழ்க்கை வரலாறு ஆகியவை இச்சங்கத்தாலும் அதன் மாத ஆய்விதழ் மூலமும் சிறப்பாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

தொடக்ககால வெளிநாட்டு மற்றும் மிஷனரிகளின், உபதேசி மார்களின் இறைப்பணி மட்டுமல்லாது சமூகப்பணி மருத்துவப் பணி ஆசிரியப்பணி ஆலோசனைப் பணி பெண்கள் குழந்தைகள் நலன் காக்கும் பணி என அவர்களின் அனைத்து சீரிய பணிகளும் சிறப்பான முறையில் இச்சங்கத்தின் மாத இதழான கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள் ஆய்விதழ் மூலமாகவும் சிறப்பாக விவரிக்கப்பட்டுள்ளதைப் பார்க்கும் பொழுது உள்ளம் பூரிப்படைகிறது.

சிதைவடையும் நிலையிலுள்ள கிறிஸ்தவ வரலாற்றுச் நூல்கள் ஸ்கேன் செய்யப்பட்டு பாதுகாக்கப்படுகின்றன மின் நூல்களை உள்ளடக்கி மின்னணு நூலகம் இச்சங்கத்தின் மூலமாக சிறப்பாக செயல்படுத்தப்படுகிறது. பழைய வரலாற்று நூல்கள் பழைய புத்தக கடைகளில் இருந்தும் தேடிக் கண்டுபிடிக்கப் பட்டு ஆவணப் படுத்தப்படுகிறது. மேலும் மிஷனரிகள் இறை பணி செய்த இடங்கள் அவர்களது நினைவிடம் உள்ள இடங்கள் ஆகியவற்றை உள்ளடக்கிய மிஷினரி சுற்றுலா திட்டத்திற்கான வரைவுகள் செயலாக்கம் பெற்று வருகின்றன.

கிறிஸ்தவ வரலாற்றாய்வாளர்கள் கௌரவிக்கப் படுகிறார்கள். அவர்களது நூல்கள் சிறப்பான முறையில் வெளியீட்டு விழாவுடன் வெளிவர உதவிகள் செய்யப்பட்டிருப்பதை நானும் கண்கூடாகப் பார்க்கிறேன். மேன்மேலும் இப்பணிகள் விரிவடைய சிறப்படைய அன்போடு வாழ்த்துகிறேன்.

கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கமே நீ வாழ்க உன்னை நேசிப்பவர்கள் சுகித்திருப்பார்களாக.

பேராசிரியர்
கா.சுரேஷ் சாலமோன்

துணை முதல்வர்
சி.எஸ்.ஐ.ஜெயராஜ் அன்னபாக்கியம் கல்லூரி
நல்லூர்



**திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் “கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்” இதழின் மூன்றாம் ஆண்டு விழாவிற்கு வாழ்த்துக்களும் பாராட்டுக்களும் தெரிவித்துக் கொள்வதில் பெருமகிழ்ச்சி அடைகின்றேன்.**

# CHRISTIAN HISTORICAL SOCIETY

ENGAGE, ENRICH, EMPOWER CHRISTIAN KNOWLEDGE

## *Membership Circulation*

Dear fellows in christ,

We are glad to introduce our membership programme. Chrsitain Historical Society now accepts members who enthusiastic to join with us.

To know more please visit our website : https://christianhistoricalsociety.in/membership/

Glimpse about us!!

**Who are we ?**

Chrisitian Historical Society, a Christian researchers fellowship which empower, engage, enrich christian history and preserve Christian contributions to indian society. Christian Historical Society itself run by volunteers, theologians and Historians. Last three years our society has done various projects like field research, digitization, multimedia podcasting, social media proclamation for the goodness of Indian christianity and the Kingdom of God. Especially for the empowerment of future christian generations, our society publishes a Christian History research periodical called "Christhava Varalatru Suvadugal". For the Enrichment, and Engagement of christian knowledge Chrsitian Historical Society re-publishes the old christian books.If your field is history—no matter your specialization or profession—membership in the Chrsitian Historical Society is indispensable. Among the numerous organizations that serve historians, only the Chrsitian Historical Society brings together people who are like minded from all geographical, and topical specializations and all work contexts, embracing the breadth and variety of activity in history today. More importantly, only the Chrsitian Historical Society addresses the interests of the discipline as a whole as well as the diverse needs of its individual members.

**Advocate for the Discipline**

Working to protect history and preserve christian antiques, uphold academic freedom, safeguard history education, secure resources for historical study, preserve historical archives, and protect historians around the world, Supporting efforts to ensure broad participation by women, independent scholars, public historians, and teachers.

**Promote Scholarly Discussion**

Publishing the Christhava Varalatru Suvadugal, the major journal of record for the Christian historical discipline offering hundreds of indispensable chrsitain research articles, which offers articles and commentary on teaching, technology, history in the media, public history, archives, and research Posting on a wide range of topics relevant to members and the history discipline on Perspectives Daily, the official blog of the Chrsitian Historical Society Facilitating Chrsitian Historical Knowledge, an online forum where members can collaborate with other historians and educators.

| | |
|---|---|
| **Bank** | **: Federal Bank** |
| **Name** | **: Tinnevelly Christian Historical Society** |
| **A/c Number** | **: 1748 020000 3684** |
| **IFSC Code** | **: FDRL0001748** |

christianhistorical@gmail.com

**சங்கத்தில் உறுப்பினராக இணைய**
**91767 80001**

**christianhistoricalsociety.in/**
**tchsportal.co.in**

Tamil Printed Book- For Private Cirulation Only

Return Requested:

**CHRISTAVA VARALATRU SUVADUGAL**
# 2.2.3(4)North Street,
Bungalow Surandai-627859.
Tenkasi District
Tamil Nadu
Ph: 04633 290401

To


Owned & Published By TINNEVELLY CHRISTIAN HISTORICAL SOCIETY, Tamil Eduction- For Private Cirulation Only
Editor|G.MUTHAIAH SELVAKUMAR| at 2.2.3(4)North Street, Bungalow Surandai-627859. Tenkasi District Ph: 04633 290401